# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | மெய் அறிவு |
| ஆசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | தன்னாட்டம் |
| முதற்பதிப்பு | : | 2020 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 70 |
| தாள் | : | A5 (5.83” X 8.27”) |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | அனைவருக்கும் |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| நன்கொடை | : | ரூபாய் 100/- |

| எண் | பொருளடக்கம் | பக்கம் |
|---|---|---|

# மெய் அறிவு

## முன்னுரை

இந்த நூலின் தலைப்பு **“மெய் அறிவு”** என்பதாகும். அதாவது, இங்கு **“மெய்”** என்பதை தமிழ் மொழியில் ‘**உடல்**’ என்றும், ‘**உண்மை**’ என்றும் இரண்டு விதங்களில் அர்த்தங்கள் கொள்ளலாம்.

இங்கு **“அறிவு”** என்று கூறப்படுவது ஒன்றே ஒன்று மட்டும்தான் இருக்கின்றது. அதையே நாம் ‘**இறைவன்**’ என்கின்றோம்.

இந்த **“அறிவு”** என்ற ஒன்று மட்டுமே அனைத்து உயிர்களின் உள்ளேயும் அந்தர்யாமியாக இருந்து, அவைகளை இயக்குகின்றது.

படைக்கப்பட்ட அனைத்து உயிரினங்களிலும், ஓரறிவு படைத்த ஒரு செல் உயிரியான ‘**கொரோனா**’ முதல், ஆறறிவு படைத்த பல செல்கள் உயிரியான ‘**மனிதன்**’ வரை, உடல் என்ற உபாதியைப் பொருத்து அறிவால் மாறுபடுகின்றது.

இதில், மனிதன் **“மெய்”** என்ற வார்த்தைக்கு, ‘**உடல்**’ என்று பொருளை எடுத்துக் கொண்டான் எனில், அவனது புரிதல் உடல் சார்ந்த அறிவாக மட்டுமே தனித்து நின்று விடுகின்றது. அதே மனிதன் **“மெய்”** என்ற வார்த்தைக்கு, ‘**உண்மை**’ என்று பொருளை எடுத்துக் கொண்டான் எனின்,

அவனது புரிதல் உண்மை அறிவான இறைவனுடன் இரண்டறக் கலந்து விடுகின்றது.

ஒரு வகுப்பறையில் படிக்கின்ற பல மாணவர்களுக்கும், ஆசிரியர் ஒரே மாதிரியாகத்தான் பாடங்களை நடத்துகின்றார். ஆனால், அந்த மாணவர்களுக்குள் அதை புரிந்துக் கொள்கின்ற அறிவில் வித்தியாசம் இருப்பதினால், ஒருவன் அந்த பாடங்களை ஒழுங்காக புரிந்துக் கொண்டு, நல்ல மதிப்பெண்கள் பெற்று முதல் மாணவனாக இருக்கின்றான்.

ஆனால், அதே வகுப்பறையில் படிக்கின்ற மற்ற சில மாணவர்களோ, அதே பாடங்களை சரியாக புரிந்துக் கொள்ளாததினால், குறைந்த மதிப்பெண்கள் பெற்று, பாடங்களில் பின் தங்கிய மாணவர்களாக இருக்கின்றனர்.

அதாவது, அவரவர்கள் புரிந்துக் கொள்வதை வைத்து, அவர்கள் '**அறிவு**' இருக்கின்றது.

இதுப்போன்றே, இந்த **"மெய் அறிவு"** என்ற பதத்தை '**உண்மை**' அறிவாக புரிந்துக் கொண்டவன் '**ஞானி**' என்று அழைக்கப்படுகின்றான்.

இந்த **"மெய் அறிவு"** என்ற பதத்தை '**உடல்**' அறிவாக புரிந்துக் கொண்டவன் '**அஞ்ஞானி**' என்று அழைக்கப் படுகின்றான்.

இங்கு புரிதல்தான் வித்தியாசம்!

படைக்கப்பட்ட உயிரினங்களில் மனிதன் மட்டுமே ஆறறிவு படைத்தவன் என்று மார்த்தட்டிக் கொண்டாலும்,

இதில் எத்தனை மனிதர்கள் உண்மையில் ஆறாவது அறிவை அறிந்திருக்கின்றார்கள் என்றால், ஒரு சிலர் மட்டுமே எனலாம்.

படைக்கப்பட்ட உயிரினங்களிலேயே உயர்வான உயிரினமான மனிதனுக்கு மட்டுமே ஐந்து புலன்களும், அதற்கு மேலான, '**மனம்**' என்ற ஒன்றும் கூடுதலாக கொடுக்கப்பட்டு, ஐம்புலன்களின் அறிவுகளுக்கு அப்பாற்பட்ட, **"ஆறாம் அறிவு"** கொண்டவன் மனிதன் என்கின்றோம்.

இந்த '**ஆறாம் அறிவான மனம்**' மட்டுமே மனித வாழ்க்கையை இயக்கும் ஒரு மிகச் சிறந்த கருவியாகும்.

இன்று பலர் கருதுவது போல, அறிவு என்பது மனதில் சேகரிகப்பட்ட தகவல்கள் அல்ல.

இதையே வள்ளுவரும்,

**"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு." (குறள்: 355).**

எந்த ஒரு பொருளும் எத்தகைய தன்மையோடு காணப்பட்டாலும், அந்தப் பொருளின் மெய்யான இயல்பைத் தெளிவாகக் காண்பதே அறிவாகும் என்கின்றார்.

இந்த மனிதர்களைப் பொருத்தவரை, மனதினால், பல்வேறு உலக விசயங்களை ஏற்றி வைத்துக் கொண்டால், அவனை புத்திசாலி என்று கருதுவதும், அதிலும், ஆங்கிலம் நன்றாகப் பேசினால், அவனை அதிபுத்திசாலி என்று கருதுவதும் இன்றைய நடைமுறையில் உள்ளது.

ஆனால், இதற்கு முற்றிலும் முரணாக, எவன் ஒருவன் மனதை விசாரித்து, அதன் உண்மைத் தன்மையான மனசாட்சியை உள்ளுணர்வாக அறிகின்றானோ, அவனே அறிவை அறிந்த, அற்புதமான மனிதன் எனப்படுகின்றான்.

அவனே, மனதைக் கொண்டு, மகத்தான மெய் அறிவை தன் இயல்பில், தன் இருப்பில் அறிகின்றான்.

அதை விடுத்து, மனம் போன போக்கில் வாழ்கின்ற மனிதர்கள் அனைவருமே, மனித உடலில் இருக்கும், ஐந்தறிவு படைத்த மிருகங்களுக்கு ஒப்பானவர்கள்.

ஆகவே, இந்த நூலை இறுதிவரை இடையூறு இன்றி கற்று, தன் இயல்பில், தன் இருப்பில், எப்பொழுதும் இனிதாக நின்று, இன்புற்று இருக்கவேண்டும் என்பதே, ஆறு அறிவைக் கொண்டு, மெய் அறிவைப் பெற வேண்டிய மனிதப் பிறவியின் மகத்தான நோக்கமாகும்.

நன்றி!

என்றும் அன்புடன்,

**சுவாமி பிரபஞ்சநாதன்.**

ஓம் ஸ்ரீ குருப்யோ நம:

# மெய் அறிவு

## 1. ஆறாம் அறிவு

இந்த மொத்த பிரபஞ்சமும், பிரபஞ்சத்திற்கு ஆதாரமான பஞ்ச பூதங்களும், அந்த பஞ்ச பூதங்களினால் படைக்கப்பட்ட பல்வேறு உயிரினங்களும், அந்த உயிரினங்களில், ஒரு புலனை மட்டும் கொண்ட ஓரறிவு உயிரி முதல், ஐந்து புலன்களை உடைய ஐந்தறிவு மிருகங்கள் என, பலவிதமாக படைக்கப்பட்டதில், ஒரு புலனைக் கூடுதலாகக் கொடுத்து, இந்த பிரபஞ்சம் ஒன்றைப் படைத்துள்ளது என்றால், அது **மனிதன் மட்டுமே** ஆகும்.

ஆம், **'மனம்'** என்ற ஒரு புலனைக் கூடுதலாகக் கொடுத்து, ஐம்புலன் அறிவுகள் மட்டுமின்றி, அந்த மனம் என்ற கூடுதலான புலன் அறிவால் இவனை *'மனிதன்'* என்ற மகத்தானவனாக, மற்ற உயிரினங்களிடமிருந்து முற்றிலும் வேறுபடுத்தி படைத்துள்ளது என்றால், இந்த படைப்பின் நோக்கம் என்னவென்று அறிந்துக் கொள்வதற்காகவே, அவனுக்கு ஆறாவதாக இந்த அறிவை அது கொடுத்துள்ளது.

அப்படிப்பட்ட இந்த ஆறாவது அறிவான மனமே, மனிதனுக்கு *புத்தி, சித்தம், அஹங்காரம்* என்றவாறு,

பலவிதமாக பரிணாம மாற்றம் அடைந்து, நன்மை, தீமைகளை பகுத்தறியும் பண்பை அவனுக்குள் உண்டாக்குகின்றது.

இதையே, தொல்காப்பியர்

*"ஒன்றறி வதுவே யுற்றறி வதுவே*
*இரண்டறி வதுவே யதனொடு நாவே*
*மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே*
*நான்கறி வதுவே யவற்றொடு கண்ணே*
*ஐந்தறி வதுவே யவற்றொடு செவியே*
*ஆறறி வதுவே யவற்றொடு மனனே*
*நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே"*

என்று அழகாக அறிவினைப் புலன்களின் வாயிலாக வகைப்படுத்துகின்றார். இவருக்கு ஒரு படி மேலே சென்று, மனிதனுக்குக் கொடுக்கப்பட்ட அறிவை, பத்து விதமான அறிவாக அறிவிக்கின்றார் மகான் திருமூலர்.

*"உற்றறிவு ஐந்தும், உணர்ந்தறிவு ஆறு ஏழும்*
*சுற்றறிவு எட்டும் கலந்தறிவு ஒன்பதும்*
*பற்றிய பத்தும் பலவகை நாழிகை*
*அற்றறியாது அழிகின்ற வாறே."-* திருமந்திரம் 741.

ஐம்புலன்களில், அதாவது ஐம்பொறிகளின் வாயிலாக அறிந்து கொள்வது, முதல் ஐந்து வகை அறிவு என்றும், இந்த ஐந்து அறிவையும், அவற்றினின்று வேறாக இருந்து, மனத்தால் அறிந்துக் கொள்வது ஆறாவது அறிவு என்றும் கூறி, அதனைக் கொண்டு, நன்மை, தீமைகளை உணர்ந்து அறியும் அறிவு, ஏழாவது அறிவு என்றும், கற்ற கல்வியால் பெறுவது

எட்டாவது அறிவு என்றும், இவ்வாறு, ஏற்றி வைக்கப்பட்ட அறிவால் உண்டான, அனுபவத்தால் உண்டாவது ஒன்பதாவது அறிவு என்றும், இந்த ஒன்பது அறிவுக்கும் காரணமானவர், அந்த பரம்பொருள் என்று அறிந்து கொள்வது '**பதிஞானம்**' என்கின்ற **பத்தாவது அறிவு** என்றும், மிக அழகாக அறிவினைப் பற்றி விரிவாக அறிவிக்கின்றார்.

இங்கு, திருமூலர் கூறவருகின்ற கருத்து என்னவெனில், புலன்களால் நுகரப்படும் அறிவுகள் ஐந்து. அவைகள். *தொடுஅறிவு, பார்த்தல் அறிவு, கேட்டல் அறிவு, உண்ணல் அறிவு, முகர்தல் அறிவு* ஆகியவற்றுடன் ஆறாவது *மன அறிவு* என்றும், ஏழாவது மனதில் ஏற்றி வைத்துக் கொள்ளப்பட்ட புத்தக அறிவுகளான *கற்றறிவு* என்றும், எட்டாவது *நுண்ணறிவு*, ஒன்பதாவது *கலந்தறிவு*, பத்தாவது எதை அறிந்துக் கொண்டால், வேறு எதையும் அறியத் தேவை இல்லையோ, அந்த அறிவே ***'இறை அறிவு'*** என்கின்றார்.

இந்த இறை அறிவை அறிந்து, இதை அடைவதில் காலம் செல்வதை உணராது, மனிதர்கள் வீணாக அழிந்து போகின்றனரே என்கின்றார் திருமூலர்.

ஆனால், ஐம்புலன்களின் வாயிலாக அடையக்கூடிய அறிவிலேயே அனேக மனிதர்களுக்குள் ஏற்றத்தாழ்வுகள் இருப்பது போன்று, ஐம்புலன்களுக்கும் அப்பாற்பட்ட ஆறாவதாகக் கொடுக்கப்பட்ட **மனம்** என்ற ஒரு கருவியினால், அறிகின்ற அறிவிலும் ஏற்றத்தாழ்வுகள் உள்ளது.

ஏற்றத்தாழ்வுகள் கொண்ட மனதினைக் கொண்டு, மகத்தான அறிவை, அறிய வேண்டிய வழிமுறைகளை அறியாமல், மனிதன் ஐந்தறிவு கொண்ட மிருகங்களை விட கீழான நிலையில் வாழ்ந்துக் கொண்டு இருப்பதைக் காணும்

பொழுது, இவனுக்கு ஆறாவது அறிவைப் பற்றிய அறிவு, அறவே இல்லாமல் இருப்பதினால், இவன் எங்கே பத்தாவது அறிவான **"இறை அறிவு"** பற்றி அறியப் போகின்றான் என்று ஆதங்கப்பட வேண்டிய நிலை உள்ளது.

**'அறியாமை'** என்பது ஐந்தறிவு வரை உள்ள உயிர்களுக்கு உண்டாகி இருப்பதில், ஆச்சரியம் ஒன்றுமில்லை.

ஆனால், அரிதான ஆறறிவு படைத்த மனிதன் என்று மார்தட்டிக் கொள்ளுகின்ற இவன், தனக்குக் கொடுக்கப்பட்ட ஐந்து புறக்கரணங்களான புலன்களின் மூலம் அடைந்த அறிவினால், சிக்கிக் கொண்டு சிரமப்படுவதை அறியாமல், மேலும், அகக்கரணமான **'மனம்'** என்ற கூடுதலான ஒரு புலனை, எப்படி கையாளுவது என்பதையும் அறியாமல், அனேக விசயங்களை, அந்த மனதில் ஏற்றி வைத்துக் கொண்டு, அதனை **"ஆறாவது அறிவு"** என்று தவறாக கற்பித்துக் கொண்டுள்ளான்.

மேலும், மற்ற புலன்களான கண்கள், காதுகள் போன்றவற்றில், குறைபாடுகளுடன் மனிதன் காணப்படுவதைக் கண்டவுடன், அவனை உடல் உறுப்பு ஊனமானவன் என்று அழைப்பது போன்று, மனதிலும் அனேக குறைபாடுகளுடன் காணப்படுகின்ற மனிதனை, *'மன வளர்ச்சி குன்றியவன்'* அல்லது ***'பைத்தியம்'*** என்று அழைக்கின்றோம்.

இதுப்போன்றே, மனமற்ற நிலையில் மனிதன் தன் உடல், மற்றும் உடைமைகளை மறந்து, அந்த மெய்ப் பொருளுடன் இணைந்து, இரண்டற இருப்பதை காணும், இந்த உலகத்தார் பார்வையில் ஞானியும் ***'பைத்தியம்'*** என்றே அழைக்கப்படுகின்றான்.

# 2. <u>புலன் அறிவு</u>

படைக்கப்பட்ட உயிரினங்களுக்கு கொடுக்கப்பட்ட புலன்களின் அத்தியாவசியம் என்னவெனில், அதன் வாயிலாக புதிய தகவல்களை அறிந்துக் கொள்வதற்கும், அறிந்துக் கொண்ட தகவல்களை ஆய்வு செய்வதற்கும், ஆய்வு செய்த தகவல்களை மற்றவர்களுக்கு கற்பிப்பதற்கும் ஆகும்.

இதிலிருந்து *அறிவு* என்பதும், *புலன்கள்* என்பதும் வெவ்வேறல்ல என்பது உறுதியாகின்றது.

ஒரு புலன் மட்டும் கொண்ட உயிரினத்தை ஓர் அறிவு உயிரி என்றும், இரண்டு புலன்களை மட்டும் கொண்ட உயிரினத்தை ஈரறிவு உயிரி என்றும், இவ்வாறு புலன்களின் எண்ணிக்கை கூடுவதற்கு ஏற்ப, அறியும் அறிவு கூடிக் கொண்டே சென்று, இறுதியில் அனைத்தையும் அறிந்த அறிவாக மனிதன் இருக்கின்றான்.

அந்த வகையில் அறிவு விரிவாக இருந்தால்தானே, அனைத்தையும் அறிந்துக் கொள்ள முடியும் என்று மனிதன் கருதிக் கொண்டதின் விளைவாக, ஐம்புலன்கள் அறிவுகள் மட்டுமின்றி, அவனுக்குக் கொடுக்கப்பட்ட ஆறாவது அறிவான மனதில் ஏகப்பட்ட உலக விசயங்களையும், விவகாரங்களையும் ஏற்றி வைத்துக் கொண்டதினால், அவனுக்கு கொடுக்கப்பட்ட ஆறாவது அறிவையே, அவனால் அறிய முடியாமல் ஆகி விட்டான்.

ஆனால், உண்மையில், கொடுக்கப்பட்ட ஆறாவது அறிவு, அனைத்து மனிதர்களுக்கும் ஒரே மாதிரியாக இருக்கின்றதா என்றால், இல்லை என்றே அறியலாம்.

அதாவது, ஆறாவது அறிவான மனதில் மட்டுமல்ல குறை, ஐந்து அறிவு கொண்ட புலன்களில் கூட அனேக குறைகளுடன் மனிதர்கள் காணப்படுகின்றார்கள்.

அதாவது, இங்கு அறிவு என்பது, படைக்கப்பட்ட அனைத்து உயிரினங்களுக்கும் கொடுக்கப்பட்ட புலன்களைப் பொருத்தே அறியப்படுகின்றது.

அந்த வகையில்,

**ஓரறிவு** கொண்ட உயிரினங்களான *மரம், செடி, கொடி, புல், பூண்டு* போன்ற தாவர இனங்கள்.

**ஈரறிவு** கொண்ட உயிரினங்களான *நத்தை, சங்கு* (இதற்கு உடல், வாய் ஆகிய இரண்டு உறுப்புகள் மட்டுமே உள்ளது.).

**மூவறிவு** கொண்ட உயிரினங்களான *எறும்பு, கரையான், அட்டை.*

**நாலறிவு** கொண்ட உயிரினங்களான *நண்டு, தும்பி, வண்டு.*

**ஐயறிவு** கொண்ட உயிரினங்களான *விலங்குகள், பறவைகள்.*

மற்றும் **ஆறறிவு** கொண்ட உயிரினங்களான *மனிதர்கள்* என பல வகைப்படுகின்றது.

அதாவது, **மெய், வாய், மூக்கு, கண், காது** என ஐம்புலன்களின் வரிசைக் கிரமத்தின்படி, தொடுகின்ற உணர்வு

இருந்தால் *ஓர் அறிவு*, அத்துடன் சுவையும் அறிந்தால் *ஈர் அறிவு,* அவற்றுடம் முகரும் அறிவும் இருந்தால் *மூன்று அறிவு,* அவற்றுடன் பார்வையும் இருந்தால் *நான்கு அறிவு*, அவற்றுடன் கேட்கும் திறனும் இருந்தால் *ஐந்து அறிவு*, இவற்றுடன், மனம் என்ற கருவியைக் கொண்டு சிந்திக்கும் ஆற்றலும் இருந்தால் ***ஆறறிவு*** எனப்படுகின்றது.

உண்மையில், பல்வேறு புலன்களைக் கொண்ட ஒவ்வொரு உயிரினமும், தனக்குக் கொடுக்கப்பட்ட கூடுதலான புலன்களினால் அடைந்த அறிவைக் கொண்டு, ஆனந்தமாக வாழ்வதற்குப் பதிலாக, அந்த கொடுக்கப்பட்ட புலன்களின் அறிவினாலேயே, அவைகள் துயரத்தை அடைகின்றன.

எப்படி எனில்,

**மெய், வாய், மூக்கு, கண், காது** என்ற ஐம்புலன்களில் '***மெய்'*** என்ற ஒரு புலனில் அதிக ஈடுபாடு கொண்ட யானைப் போன்ற மிகப் பெரிய மிருகம் கூட, தன்னுடைய ஸ்பரிச சுகத்திற்காக ஆசைப்பட்டு, பெண் யானையின் ஸ்பரிசத்தில் ஆண் யானை மயங்கி, அதை பிடிப்பதற்காக, மறைவாக வெட்டி வைக்கப்பட்டுள்ள பள்ளத்தில் விழுகின்றது.

அதுப்போன்றே, ***'வாய்'*** என்ற ஒரு புலனில் அதிக ஈடுபாடு கொண்ட மீன், தூண்டிலில் செருகி வைத்துள்ள இரையின் சுவைக்கு ஆசைப்பாடு, அந்த தூண்டிலில் சிக்கி தன் உயிரை விடுகின்றது.

அடுத்து, ***'மூக்கு'*** என்ற ஒரு புலனில் அதிக ஈடுபாடு கொண்ட வண்டு இனம், பூக்களில் இருந்து பரவுகின்ற நறுமணத்தை முகர விரும்பி, அந்த பூவின் இதழ்கள் விரிந்திருக்கும் பொழுது அதில் உட்கார்ந்து, அந்த இதழ்கள்

குவியும் பொழுது, அதன் உள்ளேயே சிக்கி மரணத்தை தழுவுகின்றது.

‘**கண்கள்**’ என்ற புலன்களில் அதிக ஈடுபாடு கொண்ட விட்டில் பூச்சிகள் விளக்கின் ஒளியைக் கண்டு, விரைந்து வந்து அதில் விழுந்து தன் உயிரை விடுகின்றன.

‘**காதுகள்**’ என்ற புலன்களின் வசம் அதிக ஈடுபாடு கொண்ட மான், வேடனின் சாமார்த்தியம் தெரியாமல், அவன் வாசிக்கும் இனிமையான இசைக்கு மயங்கி, ஓசை வரும் திசையில் சிந்தையைச் செலுத்தி, ஓடாமல் மயங்கி நின்று, அந்த வேடனிடம் அகப்பட்டுக் கொள்கின்றது.

இவ்வாறு, ஐந்து புலன் அறிவுகளில், ஏதாவது ஒரு புலனில் சிக்கிக் கொண்டுள்ள யானை, மீன், வண்டு, விட்டில் பூச்சி, மான் போன்றவைகள், தன்னுடைய அழிவைத் தானே தேடிக் கொள்கின்ற பொழுது, ஐந்து புலன்களின் வசம் ஆழமாகச் சிக்கிக் கொண்டுள்ள மனிதன் எத்தகைய அழிவை எதிர் கொள்வான் என்று கூறவும் வேண்டுமோ?

இவ்வாறு, மனிதனுக்கு புறக்கருவிகளாக உள்ள ஐந்து புலன்களைக் கொடுத்த பிரபஞ்சம், அவன் அதிகம் அழிவை நோக்கி பயணிப்பான் எனக் கருதி, அவன் மீது இரக்கம் கொண்டு, கூடுதலாக ‘**மனம்**’ என்ற ஆறாம் அறிவு கொண்ட அகக்கருவியை அவனுக்கு கொடுத்திருப்பதின் நோக்கம், அந்த மனதின் வாயிலாக அவன் *பிறப்பு - இறப்பு* என்ற சம்ஸாரத்திலிருந்து *‘விடுதலை’* அடைய வேண்டும் என்ற நல் நோக்கமேயாகும்.

இந்த அரிதான மனதை உடைய மனிதன், அதைக் கொண்டு, அவனுள்ளே ஏற்றி வைத்துக் கொண்டுள்ள

எண்ணங்களை விசாரித்து, அதன் நன்மை, தீமைகளை பகுத்தறிந்த விவேகத்தின் வாயிலாக, தன் இருப்பை அறிந்து, அந்த பரம்பொருளை உணர்ந்துக் கொள்ள முடியும்.

மனிதனைத் தவிர, மற்ற எந்த உயிரினங்களுக்கும் தன்னை யார்? என்று அறியும் '**பகுத்தறிவு**' கிடையாது.

ஏனெனில், அவைகளுக்கு கொடுக்கப்பட்ட புலன்களின் அறிவினால், அவைகள் உணவு உட்கொள்ளுதல், உறங்குதல், புலன் நுகர்ச்சியில் ஈடுபடுதல், மல, ஜலம் கழித்தல் என எதையாவதை செய்துக்கொண்டிருக்கும்.

ஆனால், மனிதனும் தற்பொழுது, மிருகங்கள் போன்றே, தன் புலன்களைக் கொண்டு உண்ணுதல், உறங்குதல், குழந்தைகளைப் பெறுதல், மல, ஜலம் கழித்தல் என எதையாவது செய்துக் கொண்டிருக்கின்றான்.

தனக்குக் கொடுக்கப்பட்ட ஆறாவது அறிவான மனதைக் கொண்டு, நன்மை, தீமைகளை பகுத்தறியாது, அறிவில் குறைந்த அற்ப மிருகங்களைப் போன்றே வாழ்கின்றான். அவைகளைப் போன்றே சண்டை, சச்சரவுகளில் ஈடுபடுகின்றான். இறை அறிவை எட்டாமல், மற்ற எல்லா மிருகங்களைப் போன்று, அற்ப இரைக்காக அலைகின்றான்.

இறைவனை அறியாமல், இரையை மட்டுமே இன்பம் எனக்கருதி, இதற்காக இரவும், பகலும் இடையறாது ஓடிக் கொண்டிருக்கின்ற இவனை, '**பகுத்தறிவு**' உடையவன் என்று பாமரனும் கூற மாட்டான்.

# 3. <u>பகுத்தறிவு</u>

உயிரினங்களின் படிமுறை வளர்ச்சியைப் படிப்படியாக உயர்த்தி, ஐந்தறிவு கொண்டது *மிருகங்கள், பறவைகள்* என்றும், அவைகளுக்கு மேலாக **மனம்** என்ற ஆறாவது அறிவு பெற்றவன் *மனிதன்* என்றும் உயிரியல் பாங்கை நம் முன்னோர்கள் தெளிவாகக் கண்டனர்.

இதனை உணர்வாலும், அறிவாலும்தான் அவர்கள் அறிந்தனர்.

ஆறாவது *மன உணர்ச்சி* - உணர்வு.

ஆறாவது *பகுத்தறிவு* - அறிவு என நிறைவாக்கினர்.

*உணர்வுக்கு களம் மனம்.*
*அறிவிற்குக் களம் மூளை.*

இவ்வாறு, *அறிவுக் களமான மனித மூளையே, உணர்வுக் களமான மனித மனதிற்கும் தூண்டுகோல்* ஆகும்.

இவ்விரண்டையும் கூர்ந்து கவனித்த திருவள்ளுவர் மன உணர்வு ஒழுங்கின்றி இங்கும், அங்கும் அலை பாயும் என்றும், அவ்வாறு அலைபாயும் மனதினால் தீமையையும், புத்தியினால் நன்மையையும் அடையலாம் என்கின்றார்.

**'சென்ற இடத்தாற் செலவிடாது தீது ஒரீஇ**
**நன்றின்பால் உய்ப்பது அறிவு'** (குறள் - 422).

அதாவது, **மனம், புத்தி** என இவ்விரண்டையும் கூர்ந்து கவனித்த திருவள்ளுவர் மனம் போன போக்கில் போகாமல், அவைகளை தீமைகளிலிருந்து நீக்கி, நன்மைகளின் மீது திருப்புவதே அறிவாகும் என்கின்றார்.

*"மனம் சென்ற வழியெல்லாம் ஒருவனைச் செல்ல விடாமல் தீமையிலிருந்து நீக்கி, அவனை நல்ல வழியில் செலுத்துவது அறிவாகும்".*

பலவகையான எண்ணங்கள் வாழ்நாள் முழுதும் ஒருவனது மனத்தை தாக்கிய வண்ணமே இருக்கும். அவற்றுள் வேண்டாதவற்றை முன்னரே ஒதுக்கிக் கொள்வது என்பது மனத்துக்கு இயலாது.

அறிவுதான் ஓய்வு ஒழிச்சலின்றி, எப்பொழுதும் விழிப்போடு இருந்து, மனதை அதன் போக்கில் போக விடாமல், அதாவது அது தீயதைப் பற்றும் போது, பிடித்து நிறுத்தி, நல்ல வழியில் திருப்ப வேண்டும்.

மனத்தை எப்பொழுதும் நல்ல வழிகளில் செலுத்தக் கடமைப்பட்டது **"அறிவு"** என்கிறது இந்தக் குறள்.

பொதுவாக, நம்முடைய முன்னோர்கள், **'நன்மை தீமைகளை அறிவதுதான் புத்தி'** என்பதை, **"அறிவு"** என்னும் சொல்லால்தான் குறித்தனர்.

அதனைத்தான் நாம் **"பகுத்தறிவு"** என்கிறோம்.

இதில், ஆறறிவு படைத்த சிறிய குழந்தைப் பருவத்தில் மனிதனது ஆறாவது அறிவு (மனம்) முழுவதுமாக வளர்ச்சி

அடையாமல் இருக்கின்றது. அதனால், அதற்கு நன்மை, தீமை தெரிவதில்லை. அதுவே, சிலருக்கு உடல் வளர்ந்த பின்பும், அறிவு வளராமலேயே இருக்கின்றது. அதனால், எவ்வளவு வயதானாலும் நன்மை, தீமை என்ற, பகுத்தறியும் அறிவு இவர்களுக்கு உண்டாவதில்லை.

இதைத்தான் ‘**ஊனம்**’, ‘**குறைபாடு**’, ‘**மன வளர்ச்சி குன்றியது**’ என்கின்றோம்.

சில குழந்தைகளுக்கு பிறவியிலேயே, ஏதாவது சில புலன்கள் செயல்பட முடியாமல் பிறக்கின்றது. உதாரணமாக, கண்கள் இல்லாமல், காதுகள் கேட்காமல், வாய் பேச முடியாமல் என, பல்வேறு உடல் குறைகளுடன், அதாவது உடல் ஊனத்துடன் பிறக்கின்றது.

சிலருக்கு இதையும் தாண்டி, புலன்கள் அனைத்தும் நன்றாக இருப்பினும், அவைகளின் உண்மையான பயனை அறிந்துக் கொள்ளாமல், அந்த புலன்களில் சிக்கிக் கொண்டு சீரழிகின்ற மனிதர்கள், மற்றொரு அறிவான மனதினைக் கொண்டு, மகத்தான அறிவை (சித்தை) அறிய முடியாமல் இருக்கின்றனர்.

‘**அறிவே இறைவன்**’ என்பதினால், அந்த பேரறிவை, மனிதன் மட்டுமே தனக்கு கொடுக்கப்பட்ட அறிவால் அறிய முடியும். அவ்வாறு, அந்த அறிவை, அறிவால் அறிவதையே இங்கு ‘**பகுத்தறிவு**’ எனப்படுகின்றது.

மற்றபடி, ‘**கடவுள் இல்லை**’ என்ற கொள்கையை கொண்ட அறிவை, **“பகுத்தறிவு”** என்று கூறுவது, அறிவை அறியாதவன் கூற்று.

# 4. கடவுளும், கடவுள் மறுப்பும்

**‘கடவுள் இல்லை’** என்ற ஒற்றை வார்த்தைக்கு, ஒரு ஆதாரமும் காட்ட வேண்டிய கட்டாயமில்லை. ஆனால், **‘கடவுள் உண்டு’** என்பதற்கு பல்வேறு ஆதாரங்களைக் காட்டி, அனைத்து விசாரத்தின் வாயிலாக, விபரங்கள் அறியப்பட வேண்டிய கட்டாயம் உள்ளது.

எனவே, *கடவுள் இல்லை* என்று கூறுவதைக் காட்டிலும், *கடவுள் உண்டு* என்று கூறுவதற்குத்தான் **“அறிவு”** அவசியமாகின்றது.

*கடவுள் இல்லை* என்று கூறுகின்ற மனிதர்களுக்கு, கொடுக்கப்பட்ட புலன்களால் ஒரு பயனும் இல்லை. ஆனால், *கடவுள் உண்டு* என்று வழிபடுகின்றவனுக்கு, அந்த புலன்களினால் அனேக பலன்கள் உண்டாகின்றது என்ற அரிய உண்மையை, நம் முன்னோர்கள் அன்றே அறிந்து இருந்தனர்.

உதாரணமாக, நம்முடைய சனாதன தர்மத்தில் ஏதாவது ஒரு காரியத்தை தொடங்கும் முன்பு, கடவுளை அருவத்தில் வழிபட்டு விட்டு, அந்தச் செயலைத் தொடங்குவார்கள்.

அதற்காக, வழிபாட்டின் பொழுது என்ன, என்ன பொருட்களைப் பயன்படுத்தி, கடவுளை வழிபடுகின்றார்கள் என்று கவனித்தால், அதன் உண்மைத்தன்மை புரியும்.

அதாவது, பஞ்சபாத்திரத்தில் *நீர்*. சப்தம் உண்டாக்கும் *மணி,* அல்லது *மேளம்.* அடுத்து *பூக்கள், ஊதுவற்தி, சாம்பிராணி, வெற்றிலைப் பாக்கு, தேங்காய், வாழைப்பழம்,*

*தீபம், விளக்கு* மற்றும் *கற்பூரம்* போன்ற அனேக பொருட்களை கடவுள் வழிபாட்டில் பயன்படுத்தப்படுகின்றது.

இவைகளைச் சற்றே உற்று கவனித்தால், ஒவ்வொரு பொருளும், நம் ஒவ்வொரு புலன்களுடன் தொடர்பு கொண்டு இருப்பதை அறிய முடியும்.

அதாவது, நீர் தெளித்தல் என்பது *தொடு உணர்வையும்*, மணி, மேளம் போன்ற சப்தங்களை எழுப்புவது, காதுகளின் *கேட்கும் உணர்வையும்*, பூக்கள், ஊதுவற்தி, சாம்பிராணி போன்றவைகள் மூக்கின் *நுகரும் உணர்வையும்*, வெற்றிலைப் பாக்கு, தேங்காய், வாழைப்பழம் போன்றவைகள் நாக்கின் *சுவை உணர்வையும்*, தீபம், விளக்கு, கற்பூரம் போன்றவைகள் கண்களுக்கு *காணும் உணர்வையும்* உண்டாக்க வல்லவை.

இவ்வாறு, புலன்கள் ஒவ்வொன்றும், தன் கவனத்தைச் சிதறவிடாமல், குறிப்பிட்ட அந்த செயலின் மீது கவனத்தைக் குவிக்கும் பொழுது, அவைகளின் அறியும் திறன் இன்னும் ஆழமாக இருக்கும் என்று அறிந்திருந்தனர் நம் முன்னோர்கள்.

ஆகவே, நம் முன்னோர்கள் மூடர்கள் அல்ல. இதை தவறு என்று கூறி ஏளனம் செய்பவனே மூடன் ஆவான்.

இன்றைய *கடவுள் மறுப்புக் கொள்கை* என்பது, எதையாவது, வாய்க்கு வந்தபடி பேசுவது, அதில் நம்பிக்கை இல்லை என்று எதிர்த்து வாதிடுவது, நையாண்டி செய்வது, போன்ற அனேக அவ நம்பிக்கைகளை, அறியாமையில் உள்ள பாமர மக்களின் மனதில், பரவலாக இந்தக் கடவுள் மறுப்பாளர்களால் கொண்டு சென்று சேர்க்கப்படுகின்றது.

இது, இந்தக் காலத்தில் மட்டும் அல்ல. திருவள்ளுவர் வாழ்ந்த அந்தக் காலத்திலேயே இருந்தது.

திருவள்ளுவரும் தனது கடவுள் வாழ்த்துப் பகுதியில், 5 குறள்களின் வாயிலாக, **“தொழாஅர்”**, **“சேர்ந்தார்க் கல்லால்”,** **“வணங்காத் தலை”**, **“அடிசேராதார்”** என்று இறைவனைத் தொழாதவர்களை எச்சரிக்கும் விதமாக, இந்தக் குறள்கள் எதிர் மறையாக அமைக்கப்பட்டுள்ளதை கவனிக்கத்தக்கது.

தெய்வத்தினை தொழ வேண்டும் என்று நேரிடையாக செய்தியைச் சொல்லாமல், எதிர்மறையாக **“தொழா விட்டால் என்ன பயன்”** என்று கூறும் பொழுதே, கடவுளைத் தொழாதவர்கள் அந்தக்காலத்திலும் இருந்தார்கள் என்று அறிய முடிகின்றது.

திருக்குறள் கடவுள் மறுப்பாளர்களைப் பற்றிப் பேசுகிறது என்றால், நம்மால் நம்ப முடிகின்றதா? கடவுள் வாழ்த்தில், கடவுள் மறுப்பாளர்களுக்கும் கூட, 50 சதவிகித இட ஒதுக்கீடு அளித்திருக்கும் வள்ளுவரின் தயாள குணத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

வள்ளுவர் கடவுள் மறுப்பாளர் இல்லை, ஆனால் கடவுள் மறுப்பாளர்களையும் அணைத்துக் கொள்ளும் சமமானப் பார்வையைக் கொண்டவர்.

ஆகவே, கடவுள் மறுப்பு கொள்கை என்பதும் கூட, செவி வழி செய்திகளாகக் கேட்டு, மனதில் சேகரிக்கப்பட்டு, அறிவில் ஏற்றி வைக்கப்பட்ட அறியாமையே ஆகும்.

தனக்குக் கொடுக்கப்பட்ட மனதைக் கொண்டு, அந்த உண்மை அறிவான *மெய் அறிவை* அறிவதே, மனிதப் பிறவியின் மகத்துவம் ஆகும்.

எனவே, மகத்தான ***மெய் அறிவை*** அறிந்த மகான்கள் கூறுகின்ற வார்த்தைகளில் மனிதனுக்கு நம்பிக்கை மட்டும் இருந்தால் போதும். அவனுக்கு அந்த வார்த்தைகளின் மூலமாக கூடுதல் நன்மையே உண்டாகின்றது.

பொதுவாக, மனிதனின் நடைமுறை வாழ்க்கையில், ஒருவனுக்கு ஒரு குழந்தை பிறந்து, உறவுகளை அது புரிந்துக் கொள்ளும் பக்குவம் வந்ததும், அந்தக் குழந்தையின் தாய் அதன் தந்தையை அறிமுகம் செய்து வைக்கின்றாள்.

மகனே! **'இது உன்னுடைய அப்பா'** என்று அவனுக்கு அறிமுகம் செய்து வைத்ததும், அந்தக்குழந்தையின் மனதில் முதன் முதலாக ஒரு விசயம் ஏற்றப்படுகின்றது. அந்த விசயம் அந்தக் குழந்தைக்கு **'அப்பா'** என்ற ஒரு புதிய அறிவைக் கொடுக்கின்றது.

அந்த ஏற்றி வைக்கப்பட்ட அறிவு உண்மையா?, பொய்யா? என்பது, அந்தக் குழந்தைக்கு அப்பொழுது தெரியாது.

நாளடைவில் அவன் வளர்ந்து, பல்வேறு விசயங்களை அறிவாக உள் வாங்கிக் கொண்டவுடன், அதற்கேற்றவாறு அவன் நடைமுறை வாழ்க்கை நல்லதாகவோ, தீயதாகவோ இருக்கின்றது.

இதன் அடிப்படையில், ஒருவனுக்கு மனதில் ஏற்றி வைக்கப்பட்ட அனேக விசயங்களைப் பொருத்தே அவனுக்கு

கொடுக்கப்பட்ட அறிவு வளர்கின்றது. அதன் மூலமாகவே அவன், நல்லது, கெட்டதை அறிகின்றான்.

இதில், *இது நல்லது, இது கெட்டது* என்று அவன் மனம் பிரித்தறிவது என்பது, அவனது செயல் விளைவால் அவனுக்கு உண்டாகும் இன்ப, துன்பங்களின் அடிப்படையில் அமைகின்றது.

அடுத்து, அவன் கேள்விப்படுகின்ற ஒரு விசயம், அதைக் கூறுகின்றவர்களின் மீது அவன் வைத்திருக்கும் உண்மையான நம்பிக்கையின் அடிப்படையில், அதை ஏற்பதா? வேண்டாமா? என்பதை அவன் தீர்மானிக்கின்றான்.

இதன் அடிப்படையில்தான் நாம் கடவுளைப்பற்றி யார் மூலமாக தெரிந்துக் கொண்டோமோ, அவர்கள் மீது நாம் வைத்துள்ள நம்பிக்கையின் அடிப்படையில் அந்த கடவுளை ஏற்கலாமா? வேண்டாமா? என்பதையும் தீர்மானிக்கின்றோம்.

இதுப்போன்றே, கடவுள் மறுப்புக் கொள்கை என்பதும் கூட, அந்தக் கொள்கையை உடையவர்கள் மீது அவன் கொண்ட நம்பிக்கையின் காரணமாக தீர்மானிக்கப்படுகின்றது.

இதுப்போன்றே, மகன் தன் தாய் மீது வைத்திருக்கும் அபரிமிதமான நம்பிக்கையின் அடிப்படையில், தனது தாய் தன் தந்தையை அறிமுகம் செய்து வைக்கும் வார்த்தையில், முழுமையான நம்பிக்கைக் கொள்கின்றான். அதனால், அவரை அப்பாவாக ஏற்கின்றான்.

இதை விடுத்து, இவன் தவறாக ஏற்றி வைத்துக் கொண்டுள்ள விபரீத அறிவினைக் கொண்டு, தன் தாய் கூறும் வார்த்தையில் சந்தேகம் கொள்வானேயானால், அவள்மீது

உள்ள நம்பிக்கையை, அவன் இழந்து விட்டான் என்று பொருள். இத்தகைய மூடனுக்கு அவனது வாழ்க்கையில் சுகம் என்பதே உண்டாகாது.

அதுப்போன்று, மக்களின் *கடவுள் வழிபாடு* என்பதும், அதை போதிக்க வருகின்ற மகான்களின் மீது வைத்துள்ள அபரிமிதமான நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டது.

உண்மையில், மகத்தான மகான்கள் அதன் ஆழமான உட்பொருளையும், கடவுள் தத்துவத்தையும் நன்கு அறிந்து கொண்டதினால்தான், அவனவன் பக்குவத்திற்கு ஏற்றவாறு கடவுள் தத்துவத்தை அவர்கள் உபதேசித்து வந்தனர்.

இத்தகைய மகான்கள் மீது நம்பிக்கை இல்லை என்று கூறுபவன், தன் தாயை தானே நம்பாததற்குச் சமம் எனக் கூறலாம்.

இதில், குதர்க்கமான கேள்விகளை கேட்கத்தெரிகின்ற அனேகருக்கு, அந்த கடவுளை உருவத்தில் கூறினாலும், உருவமற்ற அருவத்தில் கூறினாலும், உருவமும், அருவமும் கலந்த அருஉருவத்தில் எடுத்துக் கூறினாலும் அறிந்துக் கொள்கின்ற அறிவு இன்றி, அறியாமையில் இருக்கின்றனர்.

**'அந்த கடவுளே நீதான்'** என்ற மிகப்பெரிய உண்மையை, நம் சனாதன தர்மம் எளிதாக எடுத்துக் கூறுவதை ஏற்க மனமின்றி, ஏதேதோ கடவுளின் உருவத்தை வடித்துக் கொண்டு, அவைகளைப் பல பெயர்களில் அழைத்துக் கொண்டு, கடவுளின் பெயரால், மதச் சண்டையை விதைத்துக் கொண்ட வீணர்கள் பலர், இந்த உலகத்திற்கு வீணாகவே இருக்கின்றனர்.

உண்மையில், இயற்கையின் ஒரு அங்கமான மனிதன், அந்த இயற்கையிடமிருந்து தனியாக பிரிந்து, இருந்து விட முடியாது.

இருப்பது பிரபஞ்சம் ஒன்று மட்டுமே. அதுவே இருப்பு.

படைக்கப்பட்ட மொத்த பிரபஞ்சத்தில், பல்வேறு அணுக்களுக்கு மத்தியில் இவனும் ஒரு அணு என்பதை மறந்து, தனக்கு வேறாக இந்த பிரபஞ்சத்தைப் பார்க்கின்றான்.

உதாரணமாக, ஆன்மீகத்திற்கு அப்பாற்பட்ட அறிவியல் உண்மையை ஆராய்ந்தால்கூட, மனிதன் என்பவன் பல்வேறு அணுக்களால் ஆன, பலசெல்கள் கொண்ட உயிரினம் என்று படித்து அறிந்துக் கொண்டவன், அதன்படிக் கவனித்தாலும், மனிதனுடைய ஒரு உடல் பல செல்களால் ஆகியிருக்கின்றது என்பதை ஏற்கின்றான்.

அதை ஏற்ற மனிதன், பல செல்களைக் கொண்ட தன் உடலைப் பலவாகக் காண்கின்றானா? அல்லது ஒரே உடலாகக் காண்கின்றானா?

உண்மையில், தன் உடலை பல செல்களாகக் காணாமல், அதாவது பல உடல்களாகப் பார்க்காமல் ஒரே உடலாக மட்டுமே பார்க்கின்றான்.

இதுப்போன்றே, இந்த மொத்த பிரபஞ்சமும் தன்னால் படைக்கப்பட்ட அனைத்து உயிரினங்களையும், பலவாகப் பார்க்காமல், ஒன்றாகவே, அதாவது, தன்னுடைய ஒரே உடலாகவே பார்க்கின்றது.

அப்படிப் பார்க்கின்ற பிரபஞ்சம், அதன் பார்வைக்கு **'இருப்பதெல்லாம் நானே'** என்று, தன்னை ஒன்றாகவே, நன்றாக அறிகின்றது. அதாவது ஒரே உடலாகத் தன்னை அறிகின்றது.

அந்த பிரபஞ்சத்தையே ஏக இறைவன் என்று இங்கு கூறுகின்றோம். அப்படி ஒன்றாக இருக்கின்ற ஒருவனே எல்லாமாக இருப்பதினால், **"இருப்பதெல்லாம் இறைவ(நா)னே"** என்ற பொருள்பட உரைக்கின்றோம்.

இதுப் புரியாமல், கடவுளைக் காட்டினால்தான் நான் நம்புவேன், கடவுள் என்று ஒன்று கிடையாது, கடவுளை நம்புபவன் காட்டுமிராண்டி என்று, அனேக குப்பைகளை மனதில் ஏற்றிக் கொண்டு, கடவுள் இல்லை என்று கூவிக் கொண்டிருப்பதினால், இந்த பிரபஞ்சம் இவனுக்கு மட்டும் இல்லாமல் போய் விடுமா? அல்லது இவ்வாறு கூவிக் கொண்டிருக்கின்ற இவன் மட்டும், அதற்கு வேறாகத்தான் இருக்க முடியுமா?

உண்மையில் இந்த பிரபஞ்சத்திக்கு எந்த பேதமையும் கிடையாது. ஆகவே, இந்தப் பிரபஞ்சத்தின் உடலில் ஒட்டிக் கொண்டுள்ள பல்வேறு உயிரினங்களின் மொத்தக் கூட்டத்தின் மத்தியில், கடவுள் இல்லை என்று கூறுகின்ற, இவனும் ஒட்டிக் கொண்டுதான் இருக்கின்றான் என்பதை மறந்துவிடக் கூடாது.

இவர்களது மனம் அஹங்காரத்தின் ஆழத்தில் சிக்கிக் கொண்டு, வெளியே வர மறுப்பதினால், இவர்களது செயல்கள் அனைத்துமே இந்த இயற்கைக்கு முற்றிலும் விரோதமாகவே இருக்கின்றது.

ஏனெனில், இயற்கையின் இன்றைய சீர்கேட்டிற்கு இவர்களும் காரணமாகின்றனர். பிரபஞ்சத்தின் ஒழுங்கு நியதியை மீறி நடப்பவர்களுக்கு, அது தண்டனையை வழங்கும் என்ற அனுபவ உன்மையை, அனைவரும் இன்று அறிய வேண்டிய கட்டாயம் உண்டாகியுள்ளது.

மனிதர்களாகிய இவர்களாகவே கற்பித்துக் கொண்ட கற்பனைகளுக்கும், நாம, ரூபங்களுக்கும் மகத்தான பிரபஞ்சம் முக்கியத்துவம் கொடுப்பதில்லை. அதனால், அது இவன் ஆஸ்திகன், அவன் நாஸ்திகன் என்றெல்லாம் பேதமையுடன் ஒரு பொழுதும் பார்ப்பதில்லை.

பொதுவில், படைக்கப்பட்ட அனைத்து உயிர்களும், ஒன்றுக்கொன்று ஒத்திசைவில் (Harmony) இயங்கும்படி மட்டுமே இயற்கைப் பார்த்துக் கொள்கின்றது.

இந்த பிரபஞ்சத்திற்கு எதிராக செயல்படுவன் மட்டுமே, இங்கு நாஸ்திகன் எனப்படுகின்றான். இவனையே கடவுள் மறுப்புக் கொள்கையைக் கொண்டவன் என்று இங்கு அறியப் படுகின்றான்.

ஆனால், பிரபஞ்சத்தின் பார்வையில் ஆஸ்திகன், நாஸ்திகன் என்ற பேதமைகள் இன்றி, அனைவருக்கும் ஒரே மாதிரியாகவே, சூரியனும், சந்திரனும் பயன்படுகின்றது. காற்று அனைவருக்கும் ஒரே மாதிரியாகவே வீசுகின்றது. நீர் ஒரே மாதிரியாகவே சுவைக்கின்றது. நிலம் ஒரே மாதிரியாகவே இவர்களை தாங்குகின்றது. காரணம், இந்தப் பிரபஞ்சத்தைப் பொருத்தவரை இவர்கள் இருவரும் தன் உடல் உறுப்புகள்.

மனிதன் எப்படி தன் உடலில் உள்ள அனைத்து செல்களையும் பிரித்துப் பார்க்காமல், ஒரே உடலாகத் தன்னை

அறிகின்றானோ, அதுப்போன்றே, இந்தப் பிரபஞ்சமும், இந்த பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து உயிர்களையும், அதாவது மொத்த அணுக்களையும் தன் ஒரே உடலாகவே அறிகின்றது.

பிரித்துப் பார்க்கின்ற பேதமை புத்தி எல்லாம் மனிதனின் மனதில் உண்டான அறியாமையே ஆகும்.

*கடவுள் உண்டு, கடவுள் இல்லை* என்ற இந்த அறியாமைகள் அனைத்தும், அனேக விசய ஞானங்களாக, மனிதனின் மனதில், மற்றவர்களால் ஏற்றி வைக்கப்பட்டுள்ளது.

அவைகளை மனதில் இருந்து வெளியே எடுக்காமல், அவன் ஆஸ்திகனாக இருந்தாலும், நாஸ்திகனாக இருந்தாலும், தலைகீழாக நின்று யோகம் பயின்றாலும் இந்த கடவுள் தத்துவத்தை தன்னுள் அறியாமல், வெளியே அறிய முடியாது என்பதே உண்மை.

ஆகவே, ஆறாம் அறிவு என்ற சிந்திக்கும் ஆற்றல் கொண்ட மனிதனைத் தவிர, மற்ற அறிவு குறைவாக உள்ள எந்த உயிரினமும் இயற்கையின் நல்லிணக்கத்திற்கு (Harmony) எதிராக என்றுமே செயல்படுவதில்லை.

ஆனால், மனிதன் மட்டுமே தனக்கு கொடுக்கப்பட்ட ஆறாவது அறிவினால், அஹங்காரத்தின் உச்சத்தில், அனைத்து உயிரினங்களையும் ஆட்சி செய்ய ஆசைப்பட்டு, இயற்கைக்கு எதிராக, அதாவது இந்த பிரபஞ்சத்திற்கு எதிராக செயல் படுகின்றான். அதன் விளைவாக மனிதன் மட்டுமே, தனக்கு பிறக்கின்ற பிஞ்சு குழந்தையின் மனதில், பெரும் நஞ்சை விதைக்கின்றான்.

அதற்கு சுய நலத்தை அதிகம் ஊட்டுகின்றான். உணவு ஊட்டும் பொழுதே, நீ உண்ணாவிட்டால், அந்த பூச்சாண்டிக்கு உன் உணவைக் கொடுத்து விடுவேன் என்று பயமுறுத்தி, அந்த குழந்தையின் பிஞ்சு நெஞ்சில் (மனதில்) வளரும் பருவத்திலேயே, அதற்கு பயம், வஞ்சகம், பொறாமை, கோபம், லோபம், மதம், இனம், மொழி, நாடு என பல்வேறு பிரிவினைகளுடன் கூடிய கொடிய நஞ்சினை, நன்றாக ஊட்டி வளர்க்கின்றான்.

## 5. கட்டாயக் கல்வி முறை

மனிதன் தன் குழந்தைக்கு கொடுக்க வேண்டிய வேண்டாத பல விசயங்களை, வீணாக அதன் பிஞ்சு நெஞ்சில் ஆழமாக ஏற்றி வைத்து விட்டு, அதன் பிறகு நவீன கல்வித்திட்டத்தில் கற்பிக்கப்படுகின்ற கல்வியை, கட்டாயமாக தன் குழந்தைக்கு கற்பிக்க வைக்கின்றான்.

அந்த கல்வியின் விளைவாக கற்க வேண்டிய உண்மைகளை அந்தக் குழந்தை கற்காமல், ஏற்கனவே, மற்றவர்களால் வாழ்ந்து முடிந்த வரலாறுகளையும், மாறிக்கொண்டே இருக்கின்ற அறிவியல் ஆய்வுகளையும், இயற்கைக்கு எதிரான புவியியல் பாடங்களையும், பேசுவதற்காக வந்த சொற்களை மொழி என்று அழைத்து, அதில் தமிழ், இந்தி என்ற மொழி வெறியை ஊட்டுகின்றான்.

கடை வீதியில் காய்கறி, மளிகை வாங்க வேண்டிய கணக்குக்குப் பதிலாக, கனவிலும் நடை முறைப்படுத்த முடியாத, நவீன விஞ்ஞானக் கணக்குகளை வீணாக அவன்

மண்டையில் புகுத்தி, புதுப் புது ராக்கெட்டுகளை விண்வெளிக்கு அனுப்ப வேண்டும் என்று, அனைவருக்கும் கட்டாயக் கணக்குகளையும், கணினி முறைக் கல்வி என்ற கலாச்சார சீர்கேடுகளையும், நவீனக் கல்வி முறையில் இன்றும் நடைமுறையில் இருக்கின்றது.

பொதுவாக, இன்றைய விஞ்ஞானக் கல்வியில் மனிதனுக்கு மன நிம்மதியைத் தவிர, மற்ற அனைத்து விசயங்களும், விவகாரங்களும் அவன் மனதில் அனேகமாக விதைக்கப்படுகின்றன.

இதனால், மனதில் விதைக்கப்பட்ட விளைச்சலை அறுவடை செய்வதற்கே இவன் வாழ்நாள் போதாத போது, இவன் எங்கே மனமற்ற நிலையில், அந்த பூரண அறிவை மெய்ஞானக் கல்வியின் வாயிலாக அறியப் போகின்றான்.

ஆனால், மனிதனை விட குறைவான அறிவைக் கொண்ட மற்ற உயிரினங்கள் எதுவுமே, தன் இயல்பை மாற்றும் இதுப்போன்ற விஞ்ஞான - மெய்ஞான கல்வியைக் கற்பதில்லை. கற்க வேண்டிய அவசியமும் அவைகளுக்கு இல்லை.

அதனால், அவைகள் முழுவதுமாக இயற்கையின் ஒத்திசைவில், ஒழுங்காக இருக்கின்றன. இவைகளின் பிறப்பின் நோக்கம் எதற்காகக் கொடுக்கப்பட்டதோ, அதை அவைகள் பிரபஞ்ச நியதிக்கு விரோதமில்லாமல், மிகச் சரியாக மேற் கொள்கின்றன.

அதனால்தான் மாங்காய் மரத்தில், மாங்காயையும், தேங்காய் மரத்தில் தேங்காயையும் மட்டுமே நாம் இன்றும் காண முடிகின்றது. அதைவிடுத்து, அவைகள் ஒன்றுக்கொன்று,

பொறாமையினால், மாங்காய்க்கு பதிலாக, தேங்காய்களையோ, எழுமிச்சைக் காய்களுக்குப் பதிலாக, பூசணிக் காய்களையோ மாற்றி விளைவிப்பதில்லை.

ஆனால், மனிதன் மட்டுமே தன்னிடம் உள்ள ஆறாவது அறிவு என்ற ஒன்றை, தவறாக அறிந்துக் கொண்டு, தன் மனம் போன போக்கில் போய் கொண்டு, **'மரபணு மாற்றம்'** என்ற புதிய உயிரியல் கோட்பாட்டை உண்டாக்கி, தேங்காயை, மாங்காயாக மாற்ற முயற்சிக்கின்றான்.

இதனால், இயற்கைக்கு எதிராக மனிதன் செயல்பட்டு, ஏகப்பட்ட உயிரினங்களின் வாழ்விற்கு உலை வைக்கின்றான்.

இயற்கையின் கட்டுப்பாட்டில் உள்ள மரம், செடி, கொடிகள், போன்ற மற்ற உயிரினங்களாக படைக்கப்பட்ட அனைத்தும், தன்னுடைய விளைச்சல்களாக காய், கனிகளை, கொடைத் தன்மையுடன் பல மடங்கு மற்றவர்களுக்குப் பயன் படும்படி அள்ளிக் கொடுக்கின்றன. இதுவே, இயற்கை அன்னையின் உன்னதக் கொடையாகும்.

ஆனால், மனிதன் அப்படி இல்லாமல், தான் கற்ற கல்வியினால், சுய நலத்துடன், சுற்றுப்புறச் சூழலுக்கு கேடு விளைவிக்கின்றான். இவனது புதிய கண்டுபிடிப்புகளான அறிவியல் ஆய்வுகள் அனைத்துமே, இந்த பிரபஞ்சத்திற்கு முற்றிலும் விரோதமாக மாறி, இயற்கையை சீர்குழைத்து, இன்பத்துடன் வாழ படைக்கப்பட்ட அனைத்து உயிரினங்களும் துன்பத்துடன் வாழும் சூழலுக்கு கொண்டு வந்து விட்டான்.

இந்த இழிவான செயலினால், இவன் மட்டும் பாதிப்பு அடையாதது போன்று, ஆணவத்தால் எண்ணிக் கொண்டு,

அனைத்து இடையூறுகளையும், இவன் எதிர்கால சந்ததியருக்கு உண்டாக்குகின்றான்.

மற்ற உயிரினங்கள் பாதிப்படைவதைப் பற்றி, அறவே கவலை இன்றி, எதிர்கால மனித சமுதாயத்திற்கு மிகப்பெரிய துரோகம் இழைக்கின்றான். மேலும் இயற்கைக்கு எதிராக எப்பொழுதும் செயல்பட்டுக் கொண்டே இருக்கின்றான்.

இத்தகைய இவனது இழிவான செயல்களை, இந்தப் பிரபஞ்சம் ஒரு நாளும் ஏற்பதில்லை. ஆதலால், அது தன் ஒத்திசைவில் (Harmony) இருந்து விலகுகின்ற உயிரினங்கள் எதுவாக இருப்பினும், அது ஆறறிவு படைத்த மனிதனாகவே இருப்பினும், அவனுக்குத் தண்டனை அளிப்பதில் பாரபட்சம் பார்ப்பதில்லை. இந்தப் பிரபஞ்சத்தின் சட்ட, திட்டங்களுக்கு அனைத்து உயிரினங்களும் சமம் ஆகும்.

எத்தனையோ கல்விப் பாடங்களை கட்டாயமாகக் கற்கின்ற இந்த மனித சமுதாயம், தன் அத்தியாவசிய வாழ்விற்கு ஆதாரமாக இருக்கின்ற பஞ்ச பூதங்களைப் பற்றியும், அவைகள் படைத்த உயிரினங்களைப் பற்றியும், அவைகளிடையே உள்ள வாழ்வியல் ஒத்திசைவுப் பற்றியும் அதன் அடிப்படையில், அவைகள் ஒன்றை ஒன்று சார்ந்து வாழ்கின்ற வாழ்வியல் முறைகளைப்பற்றியும் அறியாமல், அறியாமையில் இருந்துக் கொண்டு, மிகப்பெரிய அறிவாளி போன்று, இந்தப் பிரபஞ்சத்தை ஏமாற்ற நினைத்து, இவன் ஏமாந்துக் கொண்டிருக்கின்றான்.

இவனைப் பற்றிய உண்மை அறிவை இவன் அறிய விடாமல், மற்றவர்களால் ஏற்றி வைக்கப்பட்ட, ஏகப்பட்ட விசயங்கள் இவனுக்குப் பெரும் தடையாக இருக்கின்றது. இதை அறிய முடியாத அறியாமையில், இவன் சிக்கிக்

கொண்டிருப்பதை என்று அறிகின்றானோ, அன்றே அவன் ஆறாவது அறிவின் மகத்துவத்தை அறிந்தவன் ஆகின்றான்.

எனவே, ஏற்றி வைக்கப்பட்ட ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு உதவாது என்பதை அறிந்து, உண்மையான சுரைக்காயை கொண்டுவந்து சமைத்தால் மட்டுமே பசி ஆற முடியும் என்பதை புரிந்து, தன் இயல்பான உண்மை இருப்பை, உண்மை அறிவை, மெய் அறிவை அறிய, ஒவ்வொருவரும் முன் வர வேண்டும்.

## 6. மனிதனின் உண்மை அறிவு

பொதுவாக, பிறக்கின்ற ஒவ்வொரு குழந்தையும், தாயின் கருவறையில் இருந்து வெளியே வரும் வரை, தனித்த உடலாக இயங்குவதில்லை. தன் தாயைச் சார்ந்துதான் தன் உடலை இயக்குகின்றது, மற்றும் வளர்க்கின்றது. அப்படிப்பட்ட உயர்வான தாய்மையின் அவசியத்தை உணர்ந்தே, நம் முன்னோர்கள் தாயைப் போற்றுகின்றனர்.

அந்த குழந்தை தாயின் கர்பவாசத்தில் இருந்து வெளிவந்த பிறகுதான், அதன் உடல் தனியாக இயங்கத் தொடங்குகின்றது. அவ்வாறு, அதன் உடல் தனிப்பட்ட முறையில் செயல்படத் தொடங்கினாலும், அந்தக் குழந்தைக்கு கொடுக்கப்பட்ட புலன்களில், ஒவ்வொரு புலன்களாகத்தான் செயல்பட ஆரம்பிக்கும்.

அவ்வாறு புலன்கள் **மெய், வாய், மூக்கு, கண்** மற்றும் **செவி,** என ஒவ்வொன்றாகச் செயல்படத் தொடங்கும் வரிசைக்

கிரமத்தைக் கவனித்தால், ஓரறிவு முதல் ஆறறிவு வரை உள்ள உயிர்களின் உன்னத பரிணாமம் புரிய ஆரம்பிக்கும்.

அதாவது, அந்தக் குழந்தைக்கு முதலில் தொடு உணர்வு அறிவு மட்டுமே செயல்படுகின்றது. அதனால்தான் அது, தன் தாய் தொடுவதை உணர்ந்து, மெய் சிலிர்த்து ஆனந்தப்படும். இது குழந்தையின் முதல் புலனான தோலின் ஸ்பரிசம் என்ற தொடுவுணர்வாகும்.

அடுத்து, இரண்டாவது புலன் அறிவு எனப்படுகின்ற வாய் மூலமாக சப்தத்தை உண்டாக்கி, அழ ஆரம்பிக்கும், மேலும், வாயில் உள்ள நாக்கு, தனது தாய் தருகின்ற பாலை அருந்தி ருசிக்கும்.

மூன்றாவது புலனான மூக்கினால் மூச்சு விட்டுக் கொண்டே, தன் தாய் தனக்கு ஊட்டும் பாலின் மணத்தையும், தன் தாயின் உடல் வாசனையையும், மூக்கினால் முகர்ந்து அறிந்துக் கொள்ளும். அதனால்தான் தன் தாயைத் தவிர மற்றவர்கள் எடுத்து கொஞ்சும் பொழுது, அந்த வாசனை வித்தியாசத்தை அறிந்து அழ ஆரம்பிக்கும்.

அடுத்து, நான்காவது புலனான கண்கள் காட்சியைக் காண சில நாட்கள் ஆகும்.

அதுப்போன்றே, இறுதியில், ஐந்தாவது புலனான குழந்தையின் காதுகள் தன்னைச் சுற்றி உள்ளவர்கள் பேசுகின்ற சப்தத்தை மெல்ல கிரகிக்கும் அறிவு பெறும்.

இவ்வாறு, இந்த ஐம்புலன்களின் வாயிலாக அந்தக் குழந்தை அறிவை அடைகின்றது.

இந்த புலன் அறிவுகளை, இயற்கை ஓரறிவு உயிரினம் முதல், ஆறு அறிவுகள் கொண்ட மனிதன் வரை, அவைகளின் இயல்பாகவே கொடுத்து, அவைகளின் வாயிலாக அறிவின் அனுபவத்தை அடைந்து, அதனால் உண்டான ஆனந்தத்தை அவைகளை அனுபவிக்கச் செய்கின்றது.

இந்த ஆனந்தம் புலன்கள் வழியாக உண்டாகின்ற ஆனந்தம் என்பதினால், தற்காலிகமாக உண்டாகி, விரைவில் அந்த ஆனந்தம் நீர்த்து விடுகின்றது.

இதில், ஆனந்தம் என்றும் நிலைத்திருக்க வேண்டும் என்று கருதி, மனிதன் மட்டுமே தனக்கு கொடுக்கப்பட்ட ஐம்புலன்களின் வழியாகவும், மேலும் ஆறாவது அறிவாகக் கொடுக்கப்பட்ட மனம் என்ற கருவியின் மூலமாகவும், ஆனந்தத்தை அதிக நேரம் அனுபவிக்கத் துடித்தாலும், அதில் நிரந்தரமான, நிலைத்தன்மை இல்லாமல் இருப்பதை அறிகின்றான்.

அந்த நிலையான ஆனந்தம் நிலைத்திருக்கும் வழியைத் தீவிரமாகத் தேடுகின்றான். அதன் வாயிலாக இவன் அறிந்துக்கொண்ட உண்மை என்னவெனில், தன்னிடம் உள்ள புலன்களின் வாயிலாகக் கிடைத்த அறிவினாலும், மனதின் வாயிலாக அடைந்த அறிவினாலும், அந்த ஆனந்தத்தை நிலையாக அடைய முடியாது என்பதை அறிந்து, அது இவைகளுக்கு அப்பாற்பட்ட தன் இருப்பு அனுபவம் என்பதை அறிந்து, அது உள்ளுணர்வில் உண்டாகின்ற உன்னத அனுபவம் என்பதை ஏற்று, அந்த உணர்வில் ஒன்றி, அதிலேயே ஒடுங்கி விடுகின்ற, உயர்வான அறிவையே **‘ஆன்ம அறிவு’** என்று அறிகின்றான்.

எவன் தனக்குக் கொடுக்கப்பட்ட ஆறாவது அறிவான மனதில் ஏற்றி வைக்கப்பட்ட பல்வேறு எண்ணங்களை சாட்சியாக இருந்துக் கொண்டு, கவனிக்க மட்டும் செய்கின்றானோ, அவனே, அந்த மனதின் அடி ஆழத்தில் மறைந்திருக்கும் ஆறாவது அறிவை அறிகின்றான். அந்த ஆறாவது அறிவை அறிந்தவன் மட்டுமே, அதே அறிவினைக் கொண்டு *ஆன்ம அறிவை* அறிகின்றான். அந்த ஆன்ம அறிவை அறிந்தவன் மட்டுமே நிலையான ஆனந்தத்தில் நிலைத்திருக்கின்றான்.

ஆகவே, எந்த விதமான புறக் கரணங்களான தொடு உணர்வு, நாக்கு, முக்கு, கண்கள், மற்றும் காதுகள், என்ற ஐந்து புலன்களின் துணையுமின்றி, அடுத்து, மனம், தன்னை விரிவுபடுத்திக் கொண்ட புத்தி, சித்தம், அஹங்காரம் போன்ற அகக் கரணங்களின் துணையுமின்றி, '**எது தன்னைத் தானே உணர்கின்றதோ**' அதுவே, **"அறிவு"** அல்லது **"ஆன்மா"** என்று அழைக்கப்படுகின்றது.

அதையே, **ஆன்ம சைதன்யம், சித்** (அறிவு), **பிரக்ஞானம், பேரறிவு** என்றெல்லாம் பலவாறாகப் போற்றப்படுகின்றது.

அந்த ஆன்மப் பேரொளியைப் பெற்று பிரகாசிக்கும், புத்தியின் (மனதின்) ஒரு பகுதியைத்தான் '**ஆறாம் அறிவு**' என்று கூறப்படுகின்றது.

அதாவது, அந்த மெய்யறிவை (சித்தை), அறிவால்தான் (மனதால்தான்) அறிய வேண்டும். அறியவும் முடியும்.

ஐந்து புலன்களின் மூலமாக அறிந்து, உணர்ந்து, தெளிந்து பெறும் அறிவே, எண்ணங்களாக மாறி '**மனம்**' என்ற **"ஆறாம் அறிவு"** ஆக அழைக்கப்படுகின்றது.

அந்த ஆறாம் அறிவின் மூலமாகவே ஆன்மாவை நோக்கி அல்லது மற்ற உண்மைகளை நோக்கி நாம் பயணிக்க முடியும்.

மற்றவர்களால் நமக்குத் திணிக்கப்படுகின்ற, அல்லது நாமாகவே விரும்பி புகுத்திக்கொள்ளப்பட்ட புறத்தில் கற்கின்ற கல்வித் திட்டங்களின் வாயிலாக, அறிந்த அறிவால் மனதை விரிவு படுத்திக் கொள்வது என்பது, '**ஆறாம் அறிவு**' என்று கூற முடியாது.

அவ்வாறு, வெளியிலிருந்து கற்ற விசய ஞானங்களை '**படிப்பறிவு**' என்று வேண்டுமானால் அழைத்துக் கொள்ளலாமே தவிர, '**ஆறாம் அறிவு**' என்று அழைக்கவே முடியாது.

காரணம், ஆறாவது அறிவு என்பது, மனதை மனதால் விசாரித்து அறியப்பட வேண்டிய அதி உன்னத '**அறிவு**' எனப்படுகின்றது.

மனதை வெளியே உள்ள விசய ஞானங்களின் மீது திணிக்காமல், அவைகளை முழுவதுமாக விடுத்து, மனதை உள்முகமாகத் திருப்பி, எண்ணங்களை மட்டுமே கவனித்தால், அவ்வாறு கவனிக்கின்றது எதுவோ, அதுவே '**மனசாட்சி**' என்று அழைக்கப்படுகின்றது.

அந்த மனசாட்சியைத்தான் நாம் ஆன்மா, அறிவு, இறைவன், அந்தர்யாமி என்று, பலவாறாகப் பல பெயர்களைச் சூட்டி அழைக்கின்றோம்.

ஆகவே, மனதில் ஏற்றி வைக்கப்பட்ட, ஏகப்பட்ட விசய ஞானங்களை விசாரித்து, அதனால் விளைந்த விவேகத்தினால், நித்ய, அநித்ய வஸ்துவைப் பற்றிய அறிவு உண்டாகி, அதை அறிவதால் உண்டாகின்ற நன்மை, தீமைகளை பகுத்தறிந்து, மனம் எதில் சிக்கிக் கொண்டுள்ளது என்பதை எளிதாக அறியும் பொழுது, நாம் அந்த மெய்யறிவை, அதாவது, அந்த மனசாட்சியை மனதால் தொட்டு விடுகின்றோம்.

இதனால், இதுவரை ஏற்றிவைக்கப்பட்ட விசய ஞானங்களினால் மறைத்து வைக்கப்பட்டிருந்த **"மெய்யான அறிவு"** தன் உள்ளே பிரகாசிப்பதை, உள்ளுணர்வாக உணர முடியும். அதுவே உண்மையில் **"அறிவு"** எனப்படும்.

# 7. மனிதனின் பேசும் சக்தி

மனிதன் மட்டுமே மற்ற உயிரினங்களிடமிருந்து மாறுபட்டு, இந்தப் பேசும் சக்தியால் பெருமையடைகின்றான். பேச்சு என்பது பேரறிவின் பெருங்கொடை என்று அறிய வேண்டும்.

பேசும் சக்தியினால், மனிதன் தன் மனதில் தோன்றும் பல்வேறு சந்தேகங்களை, மற்றவர்களுடன் பகிந்துக் கொள்ள முடிகின்றது. அவ்வாறு கேட்கப்படுகின்ற சந்தேகங்களுக்கு பதிலாக பல அறிய உண்மைகளும், அனாவசியமாக பொய்களும் இவனுள் சேகரிக்கப்படுவதை தவிற்க முடியாமல் போகின்றது.

ஒரு வகையில், பேசும் சக்தி பயன் உள்ளதாக இவனுக்கு இன்பத்தை தந்தாலும், சிலரது பயனற்ற பேச்சினால், துன்பத்தைத் தருகின்றது.

**‘குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்’.** (குறள் 66)

உண்மையில் பேச்சை இரசிப்பது என்பது, குழந்தையின் பேச்சாக மட்டுமே இருக்கும் என்று வள்ளுவர் மிக அழகாகக் கூறுகின்றார்.

எனவே, வாய் பேச முடிகின்ற மனிதன், தனக்கு வாய் இருக்கின்றது என்பதற்காக, எந்த விதமான வார்த்தைகளை வேண்டுமானாலும் பிரயோகிக்கலாம் எனக் கருதி, மனம் போனபடி பேசிக்கொண்டு இருந்தால், வாய் பேச முடியாத ஐந்தறிவு மிருகத்திற்கும், மனதில் தோன்றியதை, அப்படியே பேசுகின்ற பேச்சு சக்தி உள்ள ஆறறிவு மனிதனுக்கும் வித்தியாசம் இல்லாமல் போகின்றது.

அதாவது, தனக்குக் கொடுக்கப்பட்ட ஆறாவது அறிவை உயர்த்திக்கொள்ள, ஆன்ம ஞான விசயங்களைப் பற்றிய அறிவை வளர்க்காமல், அற்ப கடவுள் மறுப்புக் கொள்கைகளை அறிவாகக் கருதி, மனம் போனபடி அதிகம் பேசுவதினாலும், மற்ற உலகியல் விசய சுகங்களை விவேகம் எனக் கருதி, விரிவாகப் பேசுவதினாலும், ஆறறிவு மனிதனுக்கும் மற்ற ஐந்தறிவு உயிரினங்களுக்கும் வித்தியாசம் இன்றி போகின்றது.

மனிதனிடம் உள்ள பிரத்யேக சக்தியான **‘வாய் பேசுதல்’** என்ற சொற்களின் மூலம், அவன் தன் மனதை அறிந்து, அதில் சேகரிகப்பட்ட விசயங்களை விலக்கி,

ஆறாவது அறிவை வளர்த்திக் கொள்வதுப் போன்று, மற்ற உயிரினங்களுக்கு, பேசும் சக்தியும், மனமும் இல்லாத காரணத்தினால், தனக்கு கொடுக்கப்பட்ட அற்ப அறிவைக் கொண்டு தன் அறிவை வளர்த்துக் கொள்ள முடியாது.

அவைகள், தங்களுக்கு கொடுக்கப்பட்ட ஐந்து புலன் அறிவுகளைக் கொண்டு, புலன் நுகர்ச்சியின் வாயிலாக, உணவு, உறைவிடம், இனப்பெருக்கம், தற்காப்பு நடவடிக்கைகள் என, தனக்கு கொடுக்கப்பட்ட புலன்களின் அடிப்படையில், அறிவை வளர்த்திக்கொண்டுள்ளன. இவைகளைத் தாண்டி, இவற்றின் அறிவு மேலே போகாது. போகவும் முடியாது.

எனவேதான், அவைகளை ஐந்தறிவு ஜீவன்கள் என்று அழைக்கின்றோம். மனிதன் தன் ஐந்து புலன்கள் மூலம் பெறும், ஐந்து அறிவையும் தாண்டி, பேச்சு சக்தியின் உதவியோடு, மனதில் உண்டாகின்ற அனேக சந்தேகங்களை, தன் புத்தி சக்தியினால், விசாரித்து, ஆறாவது அறிவை விரிவுபடுத்தி, தன்னுடைய பகுத்தறியும் திறனைப் பெற்றுக் கொள்கின்றான்.

இதுவே, மனிதனுக்கு கொடுக்கப்பட்ட ஆறாம் அறிவின் சிறப்பம்சமாகும்.

அதாவது, மனிதனுக்கு கொடுக்கப்பட்ட ஐம்புலன்களில் வாய் என்ற, ஒரு புலன் அறிவைக் கொண்டு, பேசும் சக்தியின் வாயிலாக, பல சொற்களை பயின்று, பேசி, அவைகளை காதுகள் என்ற மற்றொரு புலன் அறிவின் மூலமாகக் கேட்டு, மனிதனுக்கு மட்டுமே கொடுக்கப்பட்ட, கூடுதல் புலனான மனதில் விசாரித்து, புத்தியில் ஆராய்ந்து, சித்தத்தில் சேகரித்து வைத்துக் கொண்ட அஹங்காரத்தின் வாயிலாக, உண்டான விசயங்களை **“அறிவு”** எனக்கருதி, அதில் சிக்கிக் கொண்டு,

மனதில் பொதிந்துள்ள நன்மை, தீமைகளை பகுத்தறியாமல் இருக்கின்ற மனிதன் **“ஆறாம் அறிவு”** அடைந்தவன் அல்ல.

ஐம்புலன்களின் நுகர்ச்சியால், அனேக விசய சுகங்களை விருப்பத்துடன் பிடித்துக் கொண்டுள்ள, ஜட நிலையில் உள்ள மனதினை, சூக்கும நிலைக்கு உயர்த்தி, தன் உள்ளே இருக்கின்ற பேரறிவின் பெருங்கருணையை உணர்வது ஒன்றே, ஆறாம் அறிவை அடைந்ததின் அதி உன்னத பலனாகும்.

இவ்வாறு, தன்னை அறிகின்ற அந்த **“பேரறிவு”** பெரு நிலையையே, தன்னலமற்ற, தனித்துவம் வாய்ந்த **“ஆன்ம அறிவு”** என்று அழைக்கப்படுகின்றது.

*அந்த* ***ஆன்ம அறிவு*** *நிலைக்குச் சென்று விட்ட பிறகு, அங்கு அறிதலுமில்லை, உணர்தலுமில்லை.**

ஆகவே, ஆன்மீக வாழ்விலும் சரி!, உலகியல் வாழ்விலும் சரி!, இந்தத் தெளிந்த அறிவாகிய ஆறாம் அறிவு உடைய ஒருவனுக்கே, வாழ்வின் உன்னதமான அனைத்து உயர்ந்த வெற்றிகளையும், இந்தப் பிரபஞ்சம் பேரன்புடன் பெரிதாக ஈட்டிக்கொடுக்கும்.



# 8. படைப்பும், பிரபஞ்ச நியதியும்

இந்த பிரபஞ்சத்திற்கு ஆதாரமான பஞ்ச பூதங்களின் துணைக் கொண்டு, பல்வேறு உயிரினங்களை ஓரறிவு முதற்கொண்டு, ஆறறிவு வரை அதன் அத்தியாவசியம் கருதி படைக்கப்படுகின்றது.

அவ்வாறு, படைக்கப்பட்ட உயிரினங்கள் அனைத்துமே ஒரு விதமான ஒத்திசைவோடு, இந்த பிரபஞ்சத்தின் வாயிலாக இயக்கப்படுகின்றன. மேலும், அவைகளுக்குள் ஒரே விதமான நல்லிணக்கத்தைக் கையாள வேண்டும் என்று இந்த பிரபஞ்சம் விரும்புகின்றது.

அவ்வாறு, படைக்கப்பட்ட உயிரிகள் ஒவ்வொன்றிற்கும், அவைகளுக்குக் கொடுக்கப்பட்ட அறிவின் அடிப்படையில், அவைகளின் உன்னதப் பணியை, இந்த உலகத்திற்கு ஒழுங்காக வழங்கிட வேண்டும் என்று, இந்தப் பிரபஞ்சம் விரும்புகின்றது.

அவைகளுக்குக் கொடுக்கப்பட்ட பணியில் தொய்வு ஏற்படாதவாறு, தொடர்ந்து அவைகள் பணியாற்ற, பல்வேறு சுற்றுப்புறச் சூழ்நிலைகளை, அவைகளுக்குச் சாதகமாக இந்தப் பிரபஞ்சம், இயற்கையில் எளிதாக ஏற்படுத்திக் கொடுக்கின்றது.

மேலும், இந்தப் பிரபஞ்ச நியதியின்படி, ஒன்றை பலவாக பரிணமிக்கச் செய்கின்ற, படைப்பாற்றல் கொண்ட சக்தியைக் கொண்டு, ஒரு உயிரினத்தை பலவாகப் பல்கிப் பெருகச் செய்கின்றது.

உதாரணமாக, ஓர் அறிவு உயிரியான தாவரங்கள் முதற்கொண்டு, ஆறு அறிவு உயிரியான மனிதன் வரை, அவைகளின் எண்ணிக்கையில், ஏராளமாகப் பல்கிப் பெருக வைப்பதில், இந்தப் பிரபஞ்சம் பெரும் பங்கு வகிக்கின்றது.

உதாரணமாக, ஒரே ஒரு மாங்காய் கொட்டையை மண்ணில் ஊன்றினால், ஓராயிரம் மாங்காய்களை அள்ளித் தருகின்றது. அதுப்போன்றே, ஒரே ஒரு தேங்காயை இந்த மண்ணில் புதைத்தவுடன், பல ஆயிரக்கணக்கான தேங்காய்களைப் பெற்றுத் தருகின்றது.

இதுவே, இயற்கையின் நியதி.

இதற்காக, இந்த மரங்கள் எந்தவித பிரதி பலனையும், மற்றவைகளிடம் இருந்து எதிர்ப்பார்க்காமல், எந்தவித சுய நலமும் இன்றி, ஏற்றத்தாழ்வும் இன்றி, எல்லா உயிரினங்களும் சமமாக அனுபவிக்க வேண்டும் என, ஏகப்பட்ட காய்களையும், கனிகளையும் அள்ளித் தருகின்றன.

இவ்வாறு, ஓரறிவு முதல் ஆறறிவு வரைப் படைக்கப்பட்ட அனைத்து உயிரினங்களுக்கும் ஆதாரமாக, பஞ்ச பூதங்கள் பெரும் பங்கு வகிக்கின்றன.

அது எப்படி எனில், ஓர் அறிவு உயிரான தாவரத்தில் தொடங்கி, ஆறறிவு உயிரான மனிதன் வரை, அவைகளின் அத்தியாவசியத் தேவைகளான, உண்ணும் உணவு, தங்கும் உறைவிடம் என அனைத்து தேவைகளுக்கும், அவசியமான மண், நீர், காற்று, வெப்பம், மற்றும் ஆகாயம் என்ற பஞ்ச பூதங்களும் ஒன்றுசேர்ந்து, ஒருங்கிணைந்து, ஒத்திசைவுடன் அவைகளுக்குள் ஒரு ஒற்றுமையை உண்டாக்குகின்றன.

அதன் அடிப்படையில், உயிரினங்களின் உணவுச் சக்கரமும் ஒரே மாதிரியாகச் சுற்றுகின்றது.

அதாவது, ஓரறிவு உயிரினம் முதல் ஆறறிவு படைத்த உயிரினம் வரை ஒன்றை ஒன்று உணவாக உட்கொள்ளும் உணவுச் சக்கரத்தை, இந்த பிரபஞ்சம் இயற்கையாகவே, நல்லிணக்கத்தின் அடிப்படையில், இயன்றவரை மாறாமல் இருக்கும்படி ஒன்றாக இணைத்திருக்கின்றது.

இதிலிருந்து வழக்கத்திற்கு மாறாக, எந்த உயிரினங்கள், இந்த உணவுச் சக்கரத்தின் ஒழுங்குச் சுற்றில், ஊடுறுவி ஊறு விளைவிக்கின்றதோ, அந்த உயிரினங்களை தண்டிக்கும் உரிமை இந்த பிரபஞ்சத்திற்கு முழுமையாக இருக்கின்றது.

காரணம், இந்த பிரபஞ்சம் தான் படைத்த உயிரினங்களில், எந்த அறிவு கொண்ட உயிரினங்களாக இருப்பினும், அவைகளில் பேதமைக் காட்டாமல், இந்த இயற்கையின் சட்ட திட்டத்திற்கு உட்பட்டு, ஒழுங்கு நடவடிக்கைக்கு உட்படுத்தும் உன்னதப் பணியை, இந்தப் பிரபஞ்சம் மிகவும் நேர்த்தியாக மேற்கொள்கின்றது.

இந்த பிரபஞ்ச நியதிக்கு முற்றிலும் விரோதமாக செயற்பட்ட எந்த உயிரினங்களாக இருப்பினும், அவைகளை தண்டிப்பதிலும் பாகுபாடு காட்டுவதில்லை.

அந்த வகையில், தண்டனைக்கு உட்படுத்தப்பட்ட உயிரினங்களுக்கு, இயற்கையின் சீற்றங்களாகவோ, அல்லது, இயற்கைப் பேரழிவுகளாகவோ, கொள்ளை நோய்களாகவோ, கடும் உணவுப் பஞ்சங்களாகவோ, மாற்றி அவைகளை கொடிய தண்டனைக்கு உட்படுத்தி, தவறு செய்த உயிரினங்களை தன் சட்ட திட்டங்களுக்கு உட்படுத்தி தண்டிக்கின்றது.

அறிவு வேறுபாடுகளை உண்டாக்கி, இந்த உயிரினங்கள் படைக்கப்பட்டதின் நோக்கம், அவைகள் ஒன்றை ஒன்று ஒத்திசைவோடு சார்ந்து வாழும் பொழுதுதான், இந்த இயற்கையின் சம நிலை பாதிக்காமல், இயல்பாக இருக்க முடியும் என்ற ஒரு ஒழுங்கு நடவடிக்கையில், இந்த பிரபஞ்சம் எப்பொழுதும் இயங்குகின்றது.

பிரபஞ்சத்தின் ஒழுங்கு நடவடிக்கை படைக்கப்பட்ட உயிரினங்களில் மட்டும் அல்ல. மற்ற ஜடப்பொருட்களிலும் உண்டு. இதை **'ரிதம்'** என்று அழைக்கின்றோம்.

இதனால்தான் சூரியனின் வட்டப்பாதையை மாற்றாமல், நாம் வசிக்கும் பூமி முதலான, மற்ற அனைத்து கோள்களும் ஒரே ஒழுங்கில் ஒழுங்காக சுற்றி வருகின்றன.

## 9. பிரபஞ்சத்திற்கு எதிராக மனிதன்

படைக்கப்பட்ட உயிரினங்கள் இயற்கையின் நியதியின்படி, ஒன்றைச் சார்ந்து ஒன்று வாழ வேண்டுமே ஒழிய, ஒன்றை அழித்து ஒன்று வாழ முயற்சிப்பது என்பது, இவைகளுக்குள் உள்ள அறியாமையினால் இது நிகழ்கின்றது என்பதை, எந்த அறிவு உள்ள உயிரினம் அறிய முடியுமோ, அதுவே அறிவால் உயர்ந்த உயிரினம் எனப்படுகின்றது.

அப்படிப்பட்ட உயிரினமே தன்னிடம் உள்ள அறியாமையை அறிந்து, அதற்கான ஒரு தீர்வினை எளிதாக உண்டாக்க முடியும்.

அந்த வகையில், மனிதன் மட்டுமே ஆறு அறிவு படைத்தவன் என்பதினால், அவன் நினைத்தால் மட்டுமே, இந்த உயிரினங்களின் அழிவை தடுத்து, அவைகளுக்குள் ஒரு ஒற்றுமையை எளிதில் உண்டாக்க முடியும்.

உயிரினங்களிடத்தில் அந்த ஒற்றுமையை உண்டாக்கும் உன்னதமான ஒரு சொல் '**நன்றி**' என்ற ஒற்றைச் சொல்லாகும். நன்றியை எதிர்பார்க்காத மனித இதயம் எங்குமே இல்லை எனலாம்.

ஒருவர் பிறரிடம் பெற்றுக் கொண்ட உபகாரங்களுக்காக '**நீங்கள் செய்த உதவிக்கு மிகுந்த நன்றி**' என்று கூறக் கேட்டால், கேட்பவர் மனம் முழுவதுமாகக் குளிர்ந்து போகும்.

ஆனால், இன்று நாம் சுகமாக அனைத்தையும் ஆனந்தமாக அனுபவிப்பதற்கு, அதன் பின்னால், எத்தனை உயிர்களின் உழைப்பு இருந்துள்ளது என்பதை மறந்து விடுகின்றோம்.

*'மற்ற உயிர்களுக்கு நன்றி செலுத்தாதவரை, அவைகளைப் படைத்த இறைவனுக்கு நிச்சயம் நன்றி செலுத்தவே முடியாது'.*

எனவே '**நன்றி மறப்பது நன்றன்று**' என்பது வள்ளுவர் வாக்கு.

*'எதைக் கொடுக்கிறீர்களோ அதைத்தான் திரும்பவும் பெறுவீர்கள்'* என்பது நாம் அறிந்த ஒன்று.

பொதுவாக, அடுத்தவர் குறைகளை ஆராய்வதில் பகிரங்கப் படுத்துவதில் நீதிபதிகள் ஆகும் மனிதர்கள், தமது

பலவீனங்களை நியாயப்படுத்துவதில், மறைப்பதில் வக்கீல்கள் ஆகின்றனர்.

அடுத்தவர் பலவீனங்களில் வக்கீல்களாகவும், தமது குறைகளில் நீதிபதிகளாகவும் ஒருகணம் இருந்து பார்த்தால் மனித வாழ்வின் யதார்த்தங்கள் பல புரிய ஆரம்பிக்கும்.

மனிதர்கள் தங்களிடமுள்ள பலத்தை மட்டுமல்ல, பலவீனங்களையும் அங்கீகரிக்க பழகிக் கொள்ள வேண்டும். அதேசமயம் பலத்திற்குள்ள அங்கீகாரம் பலவீனங்களிற்கு வழங்கப்படல் வேண்டும் என்று தவறாக அர்த்தம் கொள்ளக் கூடாது.

அந்த வகையில், மனிதனின் பலவீனமான பகுதிகளை சற்று ஆழ்ந்துப் பார்த்தால், அவன் எந்த அளவிற்கு மற்ற உயிரினங்களிடமிருந்து பின் தங்கியுள்ளான் என்பதை அறிய முடியும்.

பஞ்ச பூதங்களால் படைக்கப்பட்ட அனைத்து உயிரினங்களுக்கும் ஆதாரமான மனிதன், தன்னுடைய சுய நலத்தினால், கொடுக்கப்பட்ட சுதந்திரத்தை தவறாகப் பயன் படுத்தி, தன்னைப் படைத்த பஞ்ச பூதங்களுக்கே கேடுகளை விளைவிக்கின்றான்.

அதில் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற வரிசைக் கிரமத்தில் மனிதன் முதல் பூதமான நிலத்தில் பிறந்து, நிலத்தில் வாழ்ந்து, நிலத்தில் மடியும் தன் இயல்பை மறந்து, அந்த மண்ணிற்கு மாபெரும் கேடுகளைச் செய்கின்றான்.

உதாரணமாக, உணவுச் சக்கரத்தில் ஒன்றை ஒன்று சார்ந்து, ஒத்திசைவுடன், சுழன்றுக் கொண்டிருக்கின்ற பல்வேறு உயிரினங்களான புழுக்கள், பூச்சிகள், பூஞ்சைகள், செடி, கொடிகள், மரங்கள், எறும்புகள், கரையான், வண்டுகள், தேனிக்கள், பறவைகள், மிருகங்கள், மற்றும் மனிதர்கள் என பல்வேறு உயிரினங்களின் உன்னதமான உணவுச் சக்கரத்தை மனிதன் மட்டுமே மாற்ற முயற்சிக்கின்றான்.

அதாவது, மண்ணில் விளையும் தாவரங்களையும், அந்த மண்ணில் வாழும், பறவை, மிருகங்களையும், தனக்கு



உணவாக்கிக் கொள்ள விரும்பி, அவைகளுக்குள் உள்ள உணவுச் சுழற்சியை மாற்றி, தனக்குச் சாதகமாகத் திருப்ப விரும்பி, மண்ணில் வாழும் தாவரங்கள், மிருகங்கள், மற்றும் பறவைகள் போன்ற உயிரினங்களுக்கு ஆதாரமான புழு, பூச்சிகளை இராசயண மருந்துகளைக் கொண்டு அழிக்கின்றான்.

அந்த இரசாயண மருந்துகளை மண்ணில் களைக் கொல்லிகளாக தெளிப்பதின் வாயிலாகவும், செடி, கொடிகள், மற்றும் மரங்களை அதிக விளைச்சலுக்கு உட்படுத்த விரும்பி, இயற்கைக்கு விரோதமாக, மேலும் சில இரசாயண உரங்களை மண்ணில் இட்டு, மண் வளத்தை கெடுக்கின்றான்.

இதனால், இந்த மண்ணிற்கு இயற்கையாகவே நன்மைகள் பல செய்துக் கொண்டிருந்த புழு, பூச்சிகள் அழிந்ததினால், மண் வளம் பாதித்து, மண்ணில் விளையும் பயிரினங்கள் பாதிப்பை அடைகின்றன.

இதனால், முதல் பூதமான மண் மாசு அடைந்து, அதில் விளைகின்ற அனைத்து தாவர இனங்களும், அந்த தாவரங்களை நம்பி உயிர் வாழ்கின்ற புழு, பூச்சிகள், பறவைகள், மிருகங்கள் என ஏராளமான உயிரினங்களும் அழிவை அடைகின்றன.

அதுமட்டுமின்றி, அவைகளுக்கு அத்தியாவசியமான பஞ்ச பூதங்களில், இரண்டாவது பூதமான நீர் பூதத்தையும் இவன் விட்டு வைக்கவில்லை.

அது எப்படி எனில், பல்வேறு இரசாயண உரங்களை மண்ணில் கலந்து, மண்ணை மாசு படுத்தியதுப் போல, அதே இரசாயண மருந்துகளை நீரில் கலந்து, நீரையும் மாசு படுத்துகின்றான்.

சாயப்பட்டறையில் இருந்து வெளியேறும் இரசாயணக் கழிவுகளையும், கழிவு நீர் சாக்கடைகளையும் நன்றாக தெளிந்து ஓடும் ஆற்று நீரில் கலக்கின்றான். இதனால், அனேக ஆறுகள் இன்று இல்லாமலேயே போய் விட்டன. அதைப்பற்றி அணுவளவும் அக்கரை இன்றி, மேலும், மேலும் நீர் நிலைகளை பல்வேறு வகைகளில் மாசு படுத்துகின்றான்.

குடி நீரை பணம் கொடுத்து வாங்கக்கூடிய துர்பாக்கிய நிலைக்கு இன்றைய மனிதனை வந்து விட்டான். இத்துடன், நீர் சுத்திகரிப்பு நிலையங்களில், அவசியமற்ற இரசாயண மருந்துகளை உபயோகித்து, நீரில் வாழும் பிராண சக்தியை (நுண்ணுயிரிகளை) கொன்று, பிராணனை வழங்கும் குடி நீரையும் மாசு படுத்துகின்றான்.

**'விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து**
**உள்நின்று உடற்றும் பசி'.** (குறள் 13)

மழை பெய்யாமல் பொய்த்து விடுமானால், கடல் சூழ்ந்த அகன்ற உலகமாக இருந்தும், அந்த நீரினால் பயனின்றி, தாவரங்கள் உயிர் வாழ முடியாமல், உண்ண உணவின்றி பசி உள்ளே நிலைத்து நின்று உயிர்களை வருத்தும் என்று எச்சரிக்கின்றது குறள்.

ஆனால், இன்றைய மனிதன் இதைப்பற்றி சிறிதும் கவலைப்படுவதாக இல்லை.

அடுத்து, காற்று பூதத்தையும் மாசு படுத்துகின்றான். அதே இரசாயண ஆலைகளிலிருந்து வெளியேறும் நச்சுப் புகை, மற்றும் வாகனங்களில் இருந்து வெளியேறும் பெட்ரோல், டீசல் போன்ற நச்சுப் புகைகள் மூலமும், காற்றை மாசு படுத்துகின்றான்.

இவ்வாறு, இவன் பஞ்ச பூதங்களில் நிலம், நீர், காற்று என்ற மூன்று பூதங்களின் சம நிலைத் தன்மைக்கு ஊறு விளைவித்து, அவைகளை மாசு படுத்தி, மற்ற பூதங்களான நெருப்பு, ஆகாயம் போன்றவைகளின் இயல்புத்தன்மையில் இடையூறு உண்டாக்கி, ஐந்து பூதங்களின் சம நிலைத் தன்மையை சீர்குழைத்து, இயற்கையின் சீற்றத்திற்கு காரணமாகின்றான்.

இதனால், விவசாயம் மட்டுமின்றி, மருத்துவத்திலும் அனேக இரசாயண மருந்துகளை கொண்டு வந்து, மக்களுக்குக் கொடுத்து, அவர்களின் இயற்கைத் தன்மையை மாற்றி, மருந்துகளினால், மனிதர்களை செயற்கைத் தன்மைக்கு உட்படுத்துகின்றனர்.

அதில், தாய்மையைப் போற்றும் தலையாய பண்புகளை இழந்து, இன்றைய இளைய தலமுறைப் பெண்களின் உன்னத தாய்மைத் தன்மையைக்கூட, அவர்களை இயல்பாக அடைய அனுமதிக்காமல், அவர்கள் குழந்தைக்காக கருத்தறித்த, மறு நாள் முதற்கொண்டு, அனேக இரசாயண மருந்துகளை மாற்றி, மாற்றி அவர்களுக்கு உண்ணக் கொடுத்து, அவர்களின் சுகப்பிரசவத் தன்மையை முற்றிலும் கெடுத்து, செயற்கையாக ஆபரேஷன் செய்துக் குழந்தையை வெளியே எடுக்கின்ற வியாபாரச் சிந்தனையின் வெறிச் செயலுக்கு, இன்றைய மனிதன் துணிந்து விட்டான்.

இதுப்போன்றே, உண்ணும் உணவுப் பொருட்களில், குடிக்கும் குடி நீரில், குளிச்சியைத் தருகின்ற குளிர் பானங்களில் என, எதில் எடுத்தாலும் இரசாயணங்களைக் கலந்து, கலப்படம் செய்து, மனித இனத்தையே அழிவுப் பாதைக்கு அழைத்துச் செல்கின்றான் இன்றைய மனிதன்.

இவ்வாறு, மனிதன் ஆறறிவு படைத்த தன் இனம் முதற்கொண்டு, ஓரறிவு கொண்ட மற்ற உயிரினங்கள் வரை ஒன்று விடாமல், அவைகளின் இயல்புக்கு விரோதமாக பல விபரீதக் காரியங்களை விளைவித்து, அதன் அழிவிற்கும், தன் அழிவிற்கும் தானே காரணமாக அமைகின்றான்.

ஆம்! இவன் செய்கின்ற அனேக சீர்கேட்டின் காரணமாக, இயற்கையை முற்றிலும் செயற்கையாக மாற்ற முயற்சிக்கின்றான். முடிவில் அதில் வெற்றி பெற முடியாமல், அந்த இயற்கையிடம் சிக்கிக் கொண்டு சீரழிகின்றான்.

இவன் கைவைத்த பஞ்ச பூதங்களில், மண் பூதம் ஒன்று மாசு அடைவதினாலேயே, மண்ணிலிருந்து வந்த மனிதன் முதற்கொண்டு, மற்ற அனைத்து உயிரினங்களும் வாழ முடியாமல் மரணத்தை அடைகின்றன.

இது எவ்வாறு எனில்,

மண் மாசு அடைவதினால், மண்ணில் விளைகின்ற தாவரங்கள் விளைச்சல் இன்றி போகின்றன, இதனால் விலைவாசி உயர்வை மனிதன் எதிர்கொள்கின்றான்.

மண்ணை மாசு படுத்தியதின் விளைவாக, மனிதனுக்கு கிடைக்க வேண்டிய தாவர உணவுகளின் விளைச்சல் குன்றியதால், தாவரங்களைச் சார்ந்து வருகின்ற உற்பத்திப் பொருட்களான உணவு, உடை, இருப்பிடம் என மனிதனின் அத்தியாவசியத் தேவைகளே ஆட்டம் காணுகின்றது.

மேலும், இராசயண மருந்துகளால் தாவரங்கள், புழு, பூச்சிகள், தேனீக்கள், வண்டுகள் என அழிக்கப்பட்டதினால், மிருகங்கள், பறவைகள் போன்றவைகளுக்கு உண்ண உணவு

கிடைக்காமல், அவைகளும் அழிந்துக் கொண்டு இருக்கின்றன. இதனால், அவைகளால் கிடைக்கப்பெற்ற பல்வேறு நன்மைகள் இந்த மண்ணிற்குக் கிடைக்காமல், மண்வளம் மேலும் கெட்டு, விவசாயம் இன்னும் மோசமாகின்றது.

மேலும், தாவர உணவுகளின் விளைச்சல் குறைவினால், மனிதன் மற்ற மிருகங்கள் பறவைகள் போன்றவைகளையும் உணவாக உட்கொள்ளத் தொடங்கி, இதுப் போதாமல், இன்னும் சில இரசாயண முறை செயற்கை பறவைகளை (பிராய்லர் கோழிகள்) உணவுக்காக உற்பத்தி செய்து, அதன் முட்டைகளை உணவாக உட்கொண்டு, உயிர்களின் மதிப்பு தெரியாமல், அவைகளின் வாழ்க்கையில் விளையாடி, வீணான பல நோய்களுக்கு இவனும் ஆட்படுகின்றான்.

இயற்கையின் கர்ம நியதிகளை மதிக்காமல், அதை மீறிக் கொண்டு இவன் செய்கின்ற பல்வேறு செயல்களினால், மொத்த மனித சமுதாயத்திற்கு பல்வேறு இடையூறுகளை உண்டாக்கிக் கொண்டுள்ளான்.

எல்லா உயிரினங்களையும் அழித்து, தன் உயிரை மட்டும் காப்பாற்றிக் கொள்ளலாம் என்ற சுய நல எண்ணம், மனிதனை எந்த அளவிற்கு அழிவுப்பாதைக்கு கொண்டு செல்கின்றது என்பதை அறிய மறுக்கின்றான்.

தன் எதிர்கால சந்ததிகள் உணவு இன்றி தவிக்கத் தானே காரணம் என்பதை அறியாமல், அனைத்து உயிர்களின் உன்னதமான சந்தோசத்தை இவன் தகர்க்கின்றான்.

இப்பொழுது தான் மட்டும் சுகமாக இருந்தால் போதும், என்ற தன் சுயநலமான எண்ணத்தினால், அனைத்து விளை

நிலங்களையும், வீட்டு மனைகளாக மாற்றி விற்பனை செய்துக் கொண்டிருக்கின்றான்.

இதுப்போன்றே, விவசாயத்திற்கு உதவிப் புரிந்த நீர் நிலைகளை எல்லாம், மாசு படுத்தி, அவைகள் நீர் இன்றி வற்றி விட்டதினால், அந்த இடங்களையும் வீட்டு மனைகளாக மாற்றி விற்று விட்டான்.

அனைத்தையும் அழித்து, தான் மட்டும் ஆனந்தமாக இருக்கலாம் எனக் கருதிய மனிதன், தான் அழிவதை அறியாத அளவிற்கு, அறிவினை இழந்து விட்டான்.

இதன் விளைவாக இயற்கை ஆறறிவு படைத்த மனிதனை, ஓரறிவு படைத்த உயிரியினால் அழிக்க முற்படுவதை அறிந்தும், இவனது அந்த ஆறறிவைக் கொண்டு ஒன்றும் செய்ய இயலாமல் மரணத்தை எதிர் கொள்கின்றான்.

இந்த நிலையிலும், இன்னும் சில மந்த மதி படைத்த, கேடுகெட்ட மனிதர்களால், மளிகைக் கடைச் சரக்குகள் முதற்கொண்டு, காய்கறிகள் என அனைத்தையும் அதிக இலாபத்திற்கு ஆசைப்பட்டு, அதிக விலைக்கு விற்பதைக் காண முடிகின்றது.

என்ன ஒரு அவல நிலையில் இந்த மனிதன் இருக்கின்றான். தன்னுடைய அவல நிலையைக் கூட அறிய முடியாதவனை ஆறறிவு படைத்த மனிதன் என்று எப்படிக் கூற முடியும்?

இவனைக் கற்றவன் என்று எப்படிப் பெருமைப் பட முடியும். இவன் கற்ற கல்வி இவனுக்கு கற்றுத்தந்த பாடங்கள்

இவனை இவ்வாறு வாழ வைத்திருக்கின்றது என்றால், இந்தக் கல்வியைக் கற்பதினால் என்ன பயன்?

இதனையே திருவள்ளுவரும், தன் குறட்பாவில்,

**கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்.** (குறள் - 2)

தூய அறிவினான இறைவனை வணங்காமல், ஒருவன் கற்ற கல்வியினால் பயன் யாது? என்கின்றார்.

கல்வி பெற்ற ஒருவன் *'கற்றதனாலேயே இறைவன் இல்லை என்று கூறுகின்றான். நான் ஏன் அவனை வணங்க வேண்டும்?'* என்றும் கேட்கிறான்.

அடுத்தவனோ, 'நான் நிறையப் படித்திருக்கின்றேன். உயிர்களைப் பற்றி அதிகம் தெரிந்து வைத்திருக்கின்றேன். உலகத்தையும் அதன் இயக்கத்தையும் நான் நன்கு அறிவேன், அறிவுதானே எல்லாம்? அறிவினும் மிஞ்சிய ஆற்றல் உண்டோ? எல்லாம் அறிந்த நான் தொழத் தேவையில்லை' என்று இறுமாப்புடன் இருக்கின்றான்.

இத்தகைய கல்வி கற்ற மனிதர்களைப் பார்த்து வள்ளுவர் கேட்கின்றார்,

*'இறைவனை வணங்கக் கற்கவில்லையென்றால் நீ என்ன கற்றுக்கொண்டிருக்க முடியும்?'*

நீ கற்ற நூல்கள் எதுவானாலும், அவற்றால் நீ அறிந்துக் கொண்டது ஒன்றுமேயில்லை.

அறிவின் எல்லையெல்லாம் கடந்த அந்த மெய்ப்பொருளை முதலில் உன்னுள் உணர்ந்துகொள். அதற்கு உன் வாழ்நாள் முழுவதும் போதாது. அதனால் முதலில் இறை(அ)வனை வணங்கக் கற்றுக்கொள்.

அவனை வணங்கும் ஒவ்வொருமுறையும், அவனை நினைக்கும் ஒவ்வொரு முறையும், தூய அறிவைப் பெறுவதை நோக்கி நீ நகர்வாய். அதுதான் உண்மை அறிவு பெறுதல் எனப்படும் என்கின்றார்.

# 10. மெய் அறிவு

எதை அறிந்துக் கொண்டால், வேறு எதையும் அறியத் தேவையில்லையோ, அதை மட்டும் அறிவதே இங்கு **“அறிவு”** எனப்படுகின்றது.

**"மெய்"** என்றால் ‘**உண்மை**’ என்றும், உண்மை என்றால் ஒன்று மட்டுமே என்றும், அதுவே ‘**இறைவன்**’ என்றும் அறிய வேண்டும்.

**"பொய்"** இரண்டு பட்டது என்றும், இரண்டு இருந்தாலே, அது அனேகமாக மாறும் என்றும் அறிய வேண்டும்.

இவ்வாறு, உண்மை, பொய்யை பகுத்தறியும் அறிவையே **“அறிவு”** என்று அழைக்கப்படுகின்றது.

பொய் என்றால் இல்லாதது என்று பலரால் தவறாகக் கருதப்படுகிறது.

இல்லாதது எப்படி இருக்க முடியும்?

உதாரணமாக, ஒருவன் ஒரு விலையுயர்ந்த பொருளை வைத்து இருக்கின்றான். ஆனால் கேட்பவர்களுக்கு அந்தப் பொருளை இல்லை என்று கூறுகின்றான்.

இந்த இடத்தில் **"இல்லை"** என்று கூறுவதை **"பொய்"** என்று கூறுகின்றோம்.

அந்தப்பொருளை அவன் வைத்திருப்பது, அவனுடைய மனதிற்கு நன்றாகத் தெரியும். இருந்தும், வேறு ஏதோதொரு காரணத்தால் இல்லை என்று கூறுகின்றான்.

அதாவது, அவனுடைய மனதிற்கு அந்தப் பொருள் இருப்பது தெரிந்திருந்தும், **'இல்லை'** என்று கூற வேண்டும் என்று, அதே மனதால் நினைக்கின்றான்.

அதாவது, அவனது மனதில் **'இருக்கின்றது'** என்ற நினைவும், **'இல்லை'** என்று கூற வேண்டிய நினைவும் சேர்ந்து இரண்டுபட்டு விட்டது.

இந்த பிளவுபட்ட கருத்து, வார்த்தையாக வெளிப்படும் பொழுது, அதை **'பொய்'** என்று கூறுகின்றோம்.

உதாரணமாக, **"பிரபஞ்சத்தைப் படைத்தது யார்?"** என்று விஞ்ஞானம் ஒரு கேள்வி எழுப்புகிறது.

அதற்குப் பதில் மெய்ஞானத்தின் மூலமாக **"இறைவன்" "கடவுள்"** என்று சொன்னதும், உடனே **''அந்தக் கடவுளைப் படைத்தது யார்?''** என்று அடுத்த கேள்வியை அறிவு பூர்வமாக கேட்டு விட்டதாக விஞ்ஞானம் தன்னைத் தானே மெச்சிக் கொள்கின்றது.

இதைப்போன்று ஏக நிலையாக - அரூப நிலையாக இருக்கின்ற தெய்வ நிலையை மெய்ஞானம் அணுவாகவும், பரிணாமம் அடைந்து விட்டபின், அதை விஞ்ஞானம் பிரபஞ்சமாகவும், இரு நிலைப்படுத்திக் கொண்டது.

இவற்றில் பின்னர் தோன்றிய அணு முதல் அண்ட கோடிகளையும், தன்னுள் கொண்ட இந்தப் பிரபஞ்சத்தையும், அவற்றின் இயக்க நிகழ்ச்சிகளையும் மெய்ஞானிகள் **'பொய்'** என்று கூறுகின்றனர். அதாவது இரண்டுபட்ட நிலை என்று கூறுகின்றார்கள்.

இதை அறியாத விஞ்ஞானமோ, இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்த இன்னொரு கடவுளைத் தேடுகின்றது.

ஏக நிலையாக உள்ள அருவ நிலையை மட்டும் உணர்ந்து கொள்ளும் ஆற்றலை **"ஞானம்"** (Wisdom) என்றும், அதை மறந்து, இந்தப் பிரபஞ்சத்தின் இரண்டுபட்ட நிலையை மாத்திரம் கண்டு, அறிவு (knowledge) மிரட்சி கொண்டு, இயங்கி நிற்கும் நிலையை **"மாயை"** என்றும் மெய்ஞானிகள் கருதுகின்றனர்.

ஆதி மெய்ப்பொருள் அருவ நிலையில் அறிவாய் இருப்பதை அறியாமல், அனேக பொய்ப் பொருள்களை அறிவாக மனதில் ஏற்றிக்கொண்டு, அதனை **'மெய்'** என்று

கூறும் அஞ்ஞானியைத்தான் இங்கு ‘**விஞ்ஞானி**’ என்று கூறப்படுகின்றது.

விஞ்ஞானம் = விக்ன+ஞானம் என பிரிக்கலாம். ’**விக்ன**’ என்றால் **“உடைந்த”**, **“சிதைந்த”** என்று பொருள்.

விஞ்ஞானம் என்றால் உடைத்து பார்க்கின்ற அறிவு, ***சிதைத்து பார்க்கின்ற அறிவு*** என பொருள்.

இந்த விஞ்ஞானம் விஞ்ஞானிகளால் மூன்று வகையாக் பகுக்கப்படுகிறது. அவைகள், ***பௌதீகம், இரசாயனம், உயிரியல்*** என்பனவாகும்.

பொருட்களை உடைத்தும், பகுத்தும், சிதைத்தும் செய்து பார்க்கின்ற அறிவு, பௌதீக இயலைப்பற்றிய அறிவு.

பொருட்களை உடைத்தும், சிதைத்தும், எரித்தும், காய்ச்சியும், ஆவியாக்கியும், ஒன்றை இன்னொன்றோடு கலந்தும் ஆய்வு செய்து பார்க்கின்ற அறிவு, இரசாயன இயலைப்பற்றிய அறிவு.

உயிரினங்களின் உடம்புகளின் இயக்க நுட்பங்களைக் கூர்ந்து கவனித்தும், அறுத்து கவனித்தும், அவற்றின் இயக்க பேதங்களின்பால் இருப்பதாகிய, இயற்கை நுட்பங்களை அறிந்து தெளிதல், உயிரியல் பற்றிய அறிவாகும்.

விஞ்ஞானம் எவ்வாறு மூன்று வகையாகப் பகுத்து பார்க்கப்பட்டதோ, அவ்வாறே மெய்ஞானமும் மூன்று வகையாகப் பகுத்துப் பார்க்கப்படுகின்றது.

அவைகள் ***உடல், உயிர், மனம்*** என்பனவாகும்.

உடல் எதனால் இயங்குகிறது?

இந்த உடலுக்கு நோய், நொடிகள் எவ்வாறு வருகின்றன? வந்தபின் மருந்து என்ற ஒன்றை எடுத்துக் கொள்வதற்கு பதிலாக, நோய் நொடிகளே வாராமல் தடுத்துக் கொள்ள என்ன வழி?

இந்த உடலுக்கு இளமையும், முதுமையும் எதனால் வருகின்றன? இவற்றையெல்லாம் ஆய்ந்து அறிவது உடலைப் பற்றிய அறிவு.

உயிர் என்பது என்ன? இது மனித உடலில் எங்கே இருக்கிறது?

மனிதனின் சகலமான இயக்கங்களுக்கும் இதுதான் ஜீவன் என்ற ஆதாரமா?

உயிர் போனபின் உடல் அழிந்து போகின்றது.

மரணத்திற்குப் பின்னால் உயிரின் நிலை என்ன?

மரணம் என்பது மனிதனின் சகல இயக்கங்களுக்கும் இறுதி முடிவா?

இந்த மரணத்தை மனிதன் வென்று விட முடியாதா? முடியுமானால், *அதற்கு என்ன வழி?* முடியாது என்றால் *மரணத்திற்குப் பின்னால் ஒரு வாழ்வு இருக்கின்றதா?*

இவைகளைப் பற்றி ஆராய்ந்த அறிவு உயிரைப் பற்றிய அறிவாக ஆயிற்று.

இந்த அறிவே ஆன்மாவைக் காட்டிக்கொடுக்கின்றது.

மனம் என்பது என்ன? இது எங்கே இருக்கிறது?

இது ஏன் ஒரு நொடி கூட சும்மா இல்லாமல் அலை பாய்ந்துக் கொண்டே இருக்கின்றது?

இப்படி அலைகின்ற மனதைக் கொஞ்ச நேரமாவது சிந்தனைகளே இல்லாதபடி, சும்மா வைத்திருக்க முடியாதா?

அப்படிச் சிந்தனைகளே இல்லாதபடி, மனதை அசைவற்ற நிலைக்கு கொண்டு செல்வதால், மனிதன் பெறுகின்ற பயன் என்ன?

இப்படி மனதை ஆய்ந்து அறிகின்ற அறிவே, மனதைப் பற்றிய அறிவு.

இப்படி மூவகைப் பகுப்புகளின் கீழே விவரிக்கப்படும் விஞ்ஞானத்திற்கும், மெய்ஞானத்திற்கும் குறிப்பிடும்படியான ஒற்றுமைகள் ஏதும் இல்லை.

ஆனால், விஞ்ஞானமும், மெய்ஞானமும் நிறைய வேறுபாடுகளைக் கொண்டது.

விஞ்ஞானம் தனது சோதனைக் கூடத்துக்குள் சிக்குகின்ற பொருட்களை மட்டும் ஆய்வு செய்ய முடியும்.

மெய்ஞானம் கண்ணால் பார்க்கமுடியாத, கைகளால் தீண்டமுடியாத எந்த சூட்சமத்தையும் ஆய்வு செய்ய வல்லது.

விஞ்ஞானதிற்கு சோதனைக்கான புறக்கருவிகள் தேவை.

மெய்ஞானத்திற்கு கருவிகள் ஏதும் வேண்டாம். அக கருவியான மனமே அதன் கருவி.

விஞ்ஞானத்தின் கோட்பாடுகள், முடிவுகள், விஞ்ஞானிக்கு விஞ்ஞானி, நாட்டுக்கு நாடு, காலத்திற்குக் காலம் மாறக்கூடியவைகள்.

மெய்ஞானத்தின் கோட்பாடுகளும், முடிவுகளும் அன்றும், இன்றும், இனி என்றும் நிலையானவை. மாற்ற முடியாதவை.

எனவே, மெய்ஞானத்தில் இருக்கின்ற மெய்ஞானிகளைப் பொருத்தவரை, இருப்பதெல்லாம் உண்மைப் பொருளான ஏக இறைவனே என்றும், அவனுக்கு வேறாக ஏதாவது இருக்குமானால், அவனைப் **பூரணமானவன்** என்று கூற முடியாது என்பதினால், இதுப்போன்ற இருமை நிலைகளை இவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

ஆனால், இந்த வி(அ)ஞ்ஞானிகளோ, *'நான் கண்டு பிடித்தேன்', 'நான் கூறினேன்', 'நான் படித்தேன்', 'நான் சம்பாதித்தேன்', 'நான் காப்பாற்றுகிறேன்'* என்று அனைத்திற்கும் **"நான்" "நான்"** என்று அகந்தை கொள்வதற்கு அடிப்படையில் என்ன அருகதை உள்ளது?

நான்! நான் தான்! நானே தான்! என சட்டைக் காலரை தூக்கி விட்டுக்கொண்டு நெஞ்சை நிமிர்த்திய நிலையில் ஆணவத் தாண்டவமாட என்னதான் தகுதியுள்ளது?

மனிதன் தன் பிறப்பின் மூலக்கூற்றை சிந்தித்தால் அகந்தை அழிந்துவிடும். ஆணவம் காணாமல் போய்விடும்.

மனிதர்கள் மூன்று விஷயங்களின் கூட்டுப் பொருள். மூன்றில் ஒரு பகுதி இறைவனுக்குரியது. இன்னொன்று அவனுக்குரியது. மற்றொரு பகுதி புழுப்பூச்சிகளுக்குரியது.

அதாவது,

*மனித உயிர் இறைவனுக்குரியது.*

*செயல்கள் அவனுக்குரியது.*

*உடல் புழுப்பூச்சிக்குரியது.*

**“உடல்+உயிர்"** ஆகியவற்றின் கூட்டுப் பொருளே மனிதன்! உடல் என்பது உயிர் பயணிக்கும் வாகனமாகும். உடலின்றி உயிர் உலகில் செயல்பட முடியாது. உயிரின்றி உடல் நிலைபெற முடியாது.

உயிர் பிரிந்தால் அதிவிரைவில் அடக்கம் செய்யப்படும் நாற்றமெடுக்கும் உடலை சுமந்து திரியும் மனிதனா, தன்னை **"நான்"** என்ற ஆணவத்தால் அடையாளப்படுத்திக் கொள்வது?

மனிதனின் இறுதி முடிவு, இந்த உடல் உருத்தெரியாமல் மண்ணோடு மண்ணாக - புழுப்பூச்சிகளுக்கு இரையாகிப் போவது தான். இந்த இடைப்பட்ட நிலைக்குள்ளதே மனித வாழ்வு. இப்படிப்பட்ட மனிதனிடம் **“நான்”** என்ற ஆணவம் தலைதூக்குவது நியாயமா?

*"மனிதன் ஒவ்வொருவரும் சிறுநீர் கழிக்குமிடத்திலிருந்து இருமுறை வெளியாகியுள்ளனர்"* என்ற சிந்தனையை அவசியம் அறிய வேண்டும்.

அதாவது, ஆணின் சிறுநீர் கழிக்கும் உறுப்பிலிருந்து ‘**விந்து**’ வடிவில் ஒரு முறையும், தாயின் பிறப்புறுப்பிலிருந்து ‘**குழந்தை**’ வடிவில் மற்றொரு முறையுமாக இருமுறை வெளிப்பட்டுள்ள மனிதன் அஹங்காரத்தின் வடிவமாக விளங்க என்ன அருகதை உள்ளது.

'**நான்**' எனும் வார்த்தை மெய்ஞானத்தின் விரோதி. ஏனெனில், மனதில் கரை புரண்டோடும் '**நான்**' என்ற அகந்தையை அழிப்பவரே, ஆன்மிகத்தின் உச்ச நிலையான உயர் ஞானமாகிய மெய்ஞானத்திற்கு வர முடியும்.

மனிதர்களை உண்மையை நோக்கி அழைத்துச் செல்வதே உண்மையான மெய்ஞானம்.

கடவுள் நம்பிக்கை ஒருவருக்கு இருக்கலாம் இல்லாமலும் இருக்கலாம். ஆனால், அவர் மனிதநேய வழியில் சென்றால் அதுவே மெய்ஞானம்.

மெய்ஞானம் என்பது மனிதாபிமான அடிப்படையில் உயர்வான வாழ்வு முறையை, மனிதன் இந்த மண்ணில் உருவாக்குவதற்கும் வாழ்வதற்குமான தேடல்.

மெய்ஞானம் என்பது ஜாதி, மதம், இனம், நாடு, கடவுள் என்ற எதற்கும் கட்டுப்படாமல் எதனுள்ளும் அடங்கி விடாமல் மனித நேயம் காணும் தேடல்.

மனிதநேயம் நினைத்தமாத்திரம் எவருக்கும் கைகூடும்.

அதற்கு மனதுதான் வேண்டும். அதற்கு மனதை செம்மைப்படுத்தி அழைத்துச் செல்ல எத்தனையோ மெய்ஞானிகள் இதுவரை தோன்றி இருக்கின்றார்கள். இனியும் தோன்றுவார்கள்.

தவறுகளை அறிந்த மாத்திரம் தங்களைத் திருத்திக் கொள்பவர்களே மெய்ஞானிகள். ஏனையோர் பொய்ஞானிகள்.

உலகிற்கு நன்மையான செயல்களையே செய்து, அதனால் மக்கள் மன நிறைவு பெற்று, அவர்கள் வாழ்க்கையிலே துன்பங்கள் நீங்கி, இன்பம் மலரக் காணும் பொழுது, அதனால், பூரணமான மன நிறைவு பெறுபவர்களே மெய்ஞானிகள் எனப்படுவார்கள்.

மெய்ப்பொருள் உணர்வுக்காகத்தான் ஆறாவது அறிவு மனிதனுக்கு கொடுக்கப்பட்டுள்ளது. மனித அறிவினுடைய நோக்கம் - பிறவியின் நோக்கம் - மெய்ப்பொருளை உணர வேண்டும் என்பதே.

ஏன் என்றால் மெய்ப்பொருள் என்பது இயற்கையின் அடிப்படையான நியதி. அந்த இயற்கை நியதி ஆதி நிலையாகவும், அணுநிலை என்ற அசைவாகவும், பிரபஞ்சம் என்ற கோர்வையாகவும், உயிர்களாகவும் நான்கு வகையிலே மலர்ந்து இயங்கிக் கொண்டிருக்கிறது.

இந்த நான்கு வகை இயற்கை நியதிகளை உணர்ந்து கொண்டால்தான் ஒருவன் **சாட்சியாகச்** செயல்பட முடியும்.

ஒவ்வொரு செயலும் ஒரு விளைவைத் தருகின்றது என்பது நமக்கு நன்றாகத் தெரியும். அந்தச் செயலின் விளைவாக என்ன என்ன பெற முடியும் என்பதைத் தெரிந்து

கொள்வதற்கு, இயற்கையின் இயல்பைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

இயற்கையின் ஆதி நிலை, அசைவு நிலை, அதனுடைய கூட்டு இயக்கங்களால் தோன்றிய பிரபஞ்சம், பேரியக்க மண்டலம், அதன் வழியே தோன்றி வந்த உயிர்கள் போன்றவற்றின், தொடர்பை அறிந்து கொண்டால்தான், இன்னது செய்தால் பிறருக்கு இந்த அளவு நன்மை உண்டாகும் என்ற தெளிவு பிறக்கும்.

ஆகவே மெய்ப்பொருள் உணர்வு என்றால், எந்த இயற்கை அனைத்துமாக இருந்து கொண்டு, நியதி மாறாமல் இயங்கிக் கொண்டிருக்கிறதோ, அதனுடைய பிரிவுதான் ஒவ்வொன்றும்.

இப்படி அனைத்துமே, **'இயற்கையின் ஒரு கூறுதான்'** என்ற எண்ணம் இருக்கும் போது, அகம்பாவம் என்ற தன் முனைப்பு தன்னால் குறையும்.

எல்லாமே பிரம்மம், ஒன்று என்ற உணர்வு, உள்ளத்தில் பதியத் தொடங்கினாலே, படைப்பின் உணர்வான கருணை, தனி மனித மனதில் **அன்பாக** ஊற்றெடுக்கும்.

ஞானம் என்பது யாராலும் அடையப்படாத நிலை அல்ல. சுத்தமான, எதற்கும் கலங்காத, பிழைகள் செய்யாத அறிவே, **"மெய் அறிவு"** அல்லது **"ஞானம்"** எனப்படுகின்றது.

இந்த மெய் அறிவையே, **'மெய்ஞானம்'** என்று அழைக்கின்றோம். இந்த ஞானத்தை அடைவதற்கு மட்டுமே அனைவரும் முயற்சி செய்ய வேண்டும்.

# <u>முடிவுரை</u>

இதுவரை விசாரித்து அறிந்த விபரங்களைக் கொண்டு, புலன்களை மட்டும் கொண்ட எந்த உயிரினமும், அந்த புலன்களின் வாயிலாக, மெய்ப்பொருளை அறிய முடியாது. உடல் அபிமானம் கொண்டதாகவே அவைகள் இருக்கும்.

அதே சமயம், அந்த புலன்களுக்கு அப்பாற்பட்ட சிந்தனை சக்தியான '**மனம்**' படைத்த மனிதன் மட்டுமே, அந்த மனதின் துணைக் கொண்டு, நன்மை, தீமைகளை புத்தியினால் பகுத்தறிந்து, **மெய் அறிவை** மட்டும் சித்தத்தில் இருத்தி, **"நான்"** என்ற அஹங்காரத்தினை அறவே ஒழித்து, தன் உள்ளே ஒளிர்கின்ற உணர்வுப் பொருளை, மெய்ப்பொருளாக அறியும் அறிவு எதுவோ, அதுவே '**இறைவன்**' என்று அறிந்து, அந்த ஏக அறிவில் எப்பொழுதும் இணைந்து இருக்கின்றவன் எவனோ, அவனே மெய் அறிவை அறிந்த **"மெய்ஞானி"** எனப்படுகின்றான். அத்தகையவனே, இந்த உடலையும், உலகத்தையும் உண்மையாகக் கருதாமல் **"மாயை"** என ஒதுக்கி, இரண்டற்ற இறைவனுடன் ஒன்றாகக் கலக்கின்றான்.

அத்தகைய போற்றுதலுக்குரிய மெய் அறிவை, மனதால் அறிந்து, அந்த அறிவாகவே பிரகாசிக்கும் பொழுது, **அறிபவனும், அறியப்படும் பொருளும்** ஒன்றாகி, அங்கு **"அறிவு"** மட்டுமே ஒளிர்கின்றது.

இந்த அறிவின் இருப்பே, தன் இருப்பு எனப்படும்.

**ஓம் தத் சத்**

